# செந்தமிழ்ச் செல்வி




உள்ளுறை



சிலம்பு-௫௬] வள்ளுவர் ஆண்டு-௨௦௧௩, ஆனி July '82 [பரல்-௧௧

# 'செந்தமிழ்ச் செல்வி'

(செந்தமிழ்த் திங்கள் வெளியீடு)



---

56 ஆண்டுகளாக நடைபெற்றுவரும் திங்களிதழ்

## "செந்தமிழ்ச் செல்வி"

செந்தமிழ்ச் செல்வியின் சீரிய பயனை இப்போது உணர்ந்து அத்தனை சிலம்புகளையும் பெறவிரும்பிய இருபெரு உயர் நிலையிலுள்ளார் கட்கு நான்கு சிலம்புகளைக் கொடுக்க முடியவில்லை. இப்போது கொடுப்பதற்குக் கிடைக்கப்பெறும் சிலம்புகள் கீழ்வருவனவாகும்.

2 முதல் 5, 8, 24 முதல் 54 ஆகிய 35 சிலம்புகளே. ஒரு சிலம்பின் விலை ரூ. 20/- 10 சிலம்புகளை மொத்தமாக வாங்குவோர்க்கு 20% கழிவும் குறைவாக வாங்குபவர்கட்கு 10% கழிவும் தரப்படும்.

56 ஆவது சிலம்பு வெளிவந்துகொண்டிருக்கிறது.

ஆண்டுக் கையொப்பம் :

உள்நாடு ரூ. 16 00 வெளிநாடு ரூ. 30 00

வாழ்நாள் கையொப்பம் :

உள்நாடு ரூ. 150 00 வெளிநாடு ரூ. 300 00

விளம்பரக் கட்டணம்:

மேலுறை 4-ஆம் பக்கம் :

முழுப்பக்கம் : ரூ. 100/- அரைப்பக்கம் ரூ. 60/-

மேலுறை 3-ஆம் பக்கம் :

முழுப்பக்கம் : ரூ. 80/- அரைப்பக்கம் ரூ. 40/-

# செந்தமிழ்ச் செல்வி

திங்கள் வெளியீடு

| சிலம்பு ௫௬ | திருவள்ளுவர் ஆண்டு ௨௦௧௩, ஆனி<br>சூலை 1982 | பரல் ௧௧ |
|---|---|---|


## திருக்குறள் பணியே கழகத்தின் தனிப்பெரும் பணி

### சப்பான் மொழியில் திருக்குறள்

இதனை மொழிபெயர்த்தவர் சப்பான் நாட்டில் சிமேதாவி (Shimeda)லுள்ள அறிஞர் சுசோ மட்சுநாகா (Shuzo Matzunaga) என்பவர் தாள் ஆலை (Paper Company) யில் இயல்பியல் பொறிஞர் (Chemical Engineer) ஆக இருந்து புகழ் பெற்றவர். அந்த நிறுவனத்தை விட்டு விலகியபின் சொந்தத்தில் சில பொருள்களை வாங்கி விற்கும் வணிகரானார். அங்ஙனம் வணிகத் தொழில் நடத்தும்போது தமிழ்நாட்டில் உள்ள அறிஞர் சிலருடன் நட்புக் கொள்ளும் வாய்ப்பு இவருக்குக் கிடைத்தது. முதன்முதலாக, சேலம் மாவட்டம் குமாரபாளைத்தில் உள்ள படப்பிடிப்புத் தொழிலர் எம். சீனிவாசன் என்பவர் நட்பினைப் பெறும் வாய்ப்பு ஏற்பட்டு அவரோடு தொடர்ந்து கடிதப்போக்குவரத்து வைத்திருந்தார். அடுத்து அவர்தம் நண்பர் திரு இராசாராம், மற்றும் சிலரது தொடர்பும் கிடைக்கப்பெற்றனர்.

அங்ஙனம் இருக்கையில் காரைக்குடியில் ஆசிரியப் பணி புரிந்துவரும் திரு. ஜி. கிளாரன்சு தனராசு, பி. ஏ., பி. டி. அவர்களுடைய நட்புறவும் கிடைக்கப்பெற்றது திருவருட் செயலே.

திரு. கிளாரன்சு தனராசு தமது வீட்டில் சிலகாலம் தங்கியிருந்த சப்பானிய மதகுரு ஒருவரின் முகவரியினைத் தேடித் தெரிவிக்குமாறு அறிஞர் சுசோ மட்சுநாகாவுக்கு எழுதிக்

கேட்டிருந்தார். அவர் அங்ஙனம் சிலகாலம் முயன்று பார்த்தும் குறிப்பிடப்பெற்ற மதகுரு எங்கிருக்கிறார் என்பதைக் கண்டுபிடிக்க முடியவில்லை என்று திரு. கிளாரன்சு தனராசு அவர்களுக்குத் தெரிவித்தனர். பிறகு தொடர்பாக இருவருக்கும் கடிதப் போக்குவரவு நடைபெற்று வந்தது. இந்தமுறையில் இன்னும் தமிழ் அறிஞர் பெருமக்கள் சிலருடைய நட்பினைப் பெற்று அறிஞர் மட்சுநாகா கடிதப்போக்குவரவு வைத்துக் கொண்டனர்.

இங்ஙனம் தொடர்பு கொண்டு வருங்கால் தமிழ் மக்களிடம் சிறந்த ஒழுக்கம் - அன்புடைமை - நேர்மை - நட்புரிமை - விருந்தோம்பல் முதலிய தனிப் பண்புகள் இருக்கின்றனவே, அங்ஙனம் இருக்கின்றமைக்குக் காரணம் யாதாகும்? எனத் தம் நண்பர் கிளாரன்சு தனராசுக்கு சப்பானிய அறிஞர் பெருமகனார் விளக்கம் கேட்டு எழுதினர்.

அங்ஙனம் கேட்டதனை மகிழ்ச்சியோடு ஏற்றுத் திரு. தனராசு தமிழ் மக்களுக்கு இரண்டாயிரம் ஆண்டு களுக்கு முற்பட்டு எழுதப்பட்ட மக்கள் வாழ்க்கைக்கு நன்னெறி காட்டும் வகையில் முதுபேரறிஞர் திருவள்ளுவர் எழுதிய திருக் குறள் என்னும் நூலே காரணம் ஆகும் என்று விளக்கி எழுதினர். அதோடு சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் அச்சிட்டு வெளி யிட்டுள்ள டாக்டர் ஜி யு போப் (Dr. G. U. Pope) என்னும் ஆங்கிலப் பேரறிஞர் எழுதிய திருக்குறள் மொழிபெயர்ப்பு நூலில் ஒரு படியினை வாங்கித் தமது அன்பிற்கு அறிகுறியாக அறிஞர் மட்சுநாகா அவர்களுக்கு அனுப்பி வைத்தனர். அந்த நூல் கிடைக்கப்பெற்றதும் அவர் அதனை முற்றும் ஊன்றிப் படித்து மகிழ்வுற்றனர். மேலும் அவர் தமிழ் மக்களுக்குத் திருக்குறள் பேர் அருள் வைப்பு நிதியாகக் கிடைக்கப் பெற் றுள்ளது என்பதை உணர்ந்து அதனை சப்பான் மொழியில் பெயர்த்து வெளியிடவுங் கருதினர்.

கழகம் வெளியிட்ட ஆங்கிலத் துரைமகனார் டாக்டர் ஜி. யு. போப் அவர்களின் திருக்குறள் பதிப்பில் குறட்பாக்கள் செய்யுள் நடையிலேயே ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்பெற் றுள்ளன. திருக்குறளைக் கற்பவர் செய்யுள் நடையில் புரிந்து கொள்வது எளிதாக இருக்காது. எனவே தமிழ்நாட்டில் கிறித் தவ மத குருவாக இருந்த அருட்திரு துரு (Rev. Drew) என்ப வர் திருக்குறளில் முதல் அறுபத்து மூன்று அதிகாரங்களை ஆங்கிலத்திலே உரைநடையில் எழுதிய மொழிபெயர்ப்பும் மற்றொரு மதகுருவாக விளங்கிய அருட்திரு ஜான் லாசரஸ் (Rev. John Lazarus) எழுதிய எஞ்சிய எழுபது அதிகாரங்களின்

மொழிபெயர்ப்பும் கழகப் பதிப்பில் சேர்க்கப்பட்டு இருக்கின்றன மேலும் தமிழ்நாட்டில் மாவட்ட ஆட்சியாளராக இருந்த அறிஞர் எல்லீசு (F. W. Ellis) துரை 120 திருக்குறட் பாக்களை மட்டும் மொழிபெயர்த்துள்ளனர். அவை பின் இணைப்பாகக் கழகப் பதிப்பில் சேர்க்கப்பெற்றுள்ளன. அதனால் திருக்குறளை ஆங்கிலத்திலே படித்து எளிதாகப் பொருள் தெரிந்து கொள்ள முடிகின்றது. எனவே அறிஞர் மட்சுநாகா திருக்குறளின் பொருளை நன்கு புரிந்துகொண்டு சப்பானில் மொழி பெயர்க்க இயலுவதாயிற்று.

சப்பான் அறிஞர் பெருமகனார் மட்சுநாகா தமது மொழியில் பெயர்த்தெழுதுவதற்கு முயன்று வெற்றி பெற்றுள்ளனர். தாம் எழுதியதை நூல் வடிவில் திருக்குறள் ஈரடி போலத் தமது மொழியில் மொழி பெயர்த்தளித்தனர். அதன் பின் தாமே ஏழு பக்க அளவில் ஆங்கிலத்தில் முகவுரை (Preface) எழுதி அதனைத் தட்டச்சில் படி செய்து நூல் முகப்பில் இணைத்தனர். அதன்கீழ் மட்சுநாகா தொழிற்றுறை மொழிபெயர்ப்பாளர் (Technical Translater) என்று கைச்சாத்து வைத்திருக்கின்றனர். பின்னர்த் தாம் படித்த நான்ஸன் கத்தோலிக்கப் பல்கலைக் கழகப் (Nanzan Catholic University) பேராசிரியர் ஜான் ஒய். நாஅய் (John Y. Naoi) என்பவரிடம் அணிந்துரை (Foreword) பெற்றுத் தமது மொழிபெயர்ப்பு நூலில் இரண்டு பக்க அளவில் இணைத்தனர். பேராசிரியர் மொழிபெயர்ப்பை நன்கு படித்துத் தம்முடைய மாணவருடைய மொழிபெயர்ப்பு மிகவும் பொருத்தமாகக் கருத்து விளக்கமாக அமைந்திருக்கிறது என்று பாராட்டியுள்ளனர். ஒரு மொழிபெயர்ப்பில் மூன்று நிறைவுகள் காணப் பெறுதல் வேண்டும் என்று தமது அணிந்துரையில் குறிப்பிட்டுள்ளார்.

1. மொழிபெயர்ப்பாகத் தோன்றக்கூடாது.
2. தமது சொந்தக் கருத்தை அதன்கண் புகுத்தல்கூடாது.
3. மொழிபெயர்ப்பு படிப்பவர் மனத்தில் மூலநூலைப் படித்துப் பயன்பெறுவதுபோல் அமைதல் வேண்டும்.

இந்த முறையில் அவர் தமது அணிந்துரையில் குறிப்பிட்டிருப்பது மிகவும் போற்றிப் புகழ்தற்குரியது.

மொழிபெயர்ப்பாசிரியர் ஏழு பக்க அளவில் தமது முகவுரையினை ஆங்கிலத்தில் எழுதிச் சேர்த்திருக்கின்றனர். அதன்கண் தமக்கு இந்த அரிய நூலை வாங்கி அனுப்பிய நண்பர் கிளாரன்சு தனராசு பி. ஏ., பி. டி. அவர்கட்குத் தமது உள

மார்ந்த நன்றியைத் தெரிவித்துள்ளனர். இப்படிப்பட்ட ஓர் அரிய நூலைச் சப்பான் மொழியில் மொழிபெயர்த்துத் தம் நாட்டு மக்களுக்குப் பெறுதற்கரிய பேரருட்செல்வத்தை வழங்கு கின்றோம் என்று தமது பெருமகிழ்ச்சியினை முகவுரையில் விளக்கி எழுதியுள்ளார்.

தாம் எழுதிய அந்தக் கைப்படியினைப் படப்பிடிப்புச் செய்து சில படிகளை வாங்கிக் கலிக்காத் துணியினால் கட்டடம் செய்து 1981 சனவரித் திங்கள் மதுரையில் நடந்த ஐந்தாவது உலகத் தமிழ் மாநாட்டிற்கு அனுப்பி வைத்துப் பின்பு நேரிலே வந்து தம் நண்பர் கிளாரன்ஸ் தனராசு மற்றும் நண்பர் இராசாராம் ஆகியோருடன் தமது திருக்குறள் மொழிபெயர்ப்பு நூலை அறிமுகப்படுத்தினர்.

அந்த நூலில் உயர்திரு கழக ஆட்சியாளருக்கு ஒரு படியும் உலகத் தமிழ் மாநாட்டுச் செயலாளரும் கழகப் பொது மேலாளரு மான திரு. இரா. முத்துக்குமாரசாமி, எம். ஏ. பி. லிப். அவர் களுக்கு மற்றொரு படியும் அன்பளிப்பாக வழங்கினர். பின்னர் சப்பான் நாட்டிற்குத் திரும்பிப்போய்த் தமது மொழிபெயர்ப்பு நூலைக் கண்கவர் வனப்பு மிக்கதாய் அச்சிட்டுக் கழக ஆட்சியருக்கு ஒரு படியும் உயர்திரு முத்துக்குமாரசாமி அவர்களுக்கு மற்றொரு படியும் அனுப்பிவைத்தனர். அந்த நூலின் அமைப்பும் அழகும் காண்பவர் உள்ளத்தைக் கவர்ந்து மட்டற்ற மகிழ்ச்சி அளிக் கின்றன.

சப்பான் மொழியில் உள்ள நூல்களின் மேலுறையின் வலப்பக்கம் முகப்பும் இடப்பக்கம் நூல் முடிவும் காணப்படும். சப்பான் மொழியில் அச்சிடப்பெற்ற திருக்குறள் மேலுறையில் சப்பான் எழுத்தில் 'திருக்குறள் பெயரும்' சென்னை வள்ளுவர் கோட்டத்தில் விற்கப்பெறும் திருக்குறள் சில அதிகாரங்கள் முழுமையாகப் பொறிக்கப்பெற்ற மூன்று பனையோலை இணைப்பு நறுக்குகள் விசிறிபோல் கண்ணைக் கவரும் வகையில் அழகுற அச்சிடப் பெற்றிருப்பதும் பெரும்வியப்பும் மகிழ்வுந் தருவதாய் உள்ளன. மேலட்டையைத் திறந்ததும் சைவசித்தாந்த நூற் பதிப்புக் கழகம் மூவண்ணங்களில் அச்சிட்டுப் பரப்பிவரும் திருவள்ளுவரின் திருவுருவம் காணப்பெறுகின்றது. அதன்கண் 'திருவள்ளுவர்' என்ற பெயரும், 'சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழக வெளியீடு' என்ற தொடரும் விலைக் குறிப்புடன் தமிழில் அச்சிடப் பெற்றிருக்கின்றன. அதன் பின்பக்கம் சென்னையி லுள்ள வள்ளுவர் கோட்டத்தின் பின்புறம் காட்சியளிக்கும் கல் தேரும் கல்மண்டபமும், மண்டபத்தின் கீழே நின்றபடி அறிஞர் மட்சுநாகா திருவுருவமும் அவர்தம் வலப்பக்கம் மதிப்பிற்குரிய

நண்பர் கிளாரன்ஸ் தனராசு, இடப்பக்கம் நண்பர் இராசாராம் நிற்கின்றமையும் அப்பக்க முழுமையும் மூவண்ணத்தில் அழகொழுகக் காணப்பெறுவது கண்கொள்ளாக் காட்சியாகவுள்ளது.



இந்த மொழி பெயர்ப்பு நூலில் திருக்குறள் பாக்கள் 1 முதல் 1330-ம் ரோமன் எழுத்தில் எண்ணிட்டிருப்பது மகிழ்ச்சிக்குரியது. மக்களுக்குத் தங்களுடைய அறிவுக் கருவூலமாகிய திருக்குறள் சப்பான் நாட்டிலே வெளியிடப்பெற்று அங்குள்ள மக்கள் அதனை வாங்கிப் போற்றிப் படித்து மகிழ்ச்சியுற்று வருகின்றனர் என்பது அளப்பரிய மகிழ்ச்சியோடு உலகுபுகழ் தருவதாகும்.

"வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து
வான்புகழ் கொண்ட தமிழ்நாடு"

---

மேலே காணப்பெறும் படத்தில் சப்பானியத் திருக்குறள் நூலை இருந்தபடி கையில் பிடித்திருப்பவர்களில் இடப்பக்கம் இருப்பவர்: என் பேரர் டாக்டர் லோகமுத்துக்கிருட்டிணனார்; வலப்பக்கம் மொழி பெயர்ப் பாசிரியர் அறிஞர் மட்சுநாகா.

அவர் எழுதிய நரம்பு மருத்துவம், நமது உடலும் இயற்பியலும் என்னும் இரண்டு நூல்களும் கழகவழி வெளியிடப் பெற்றிருக்கின்றன. அவர். இப்போது சென்னை பொது மருத்துவமனையில் புகழ் பெற்ற மருத்துவராகப் பணி புரிந்து வருகின்றனர். இடையிடையே சப்பானுக்கு மருத்துவத் துறை பற்றிய அறிஞர் கூட்டத்துக்குப் போய் வருகின்றனர். அதனால் அவருக்கு அறிஞர் மட்சுநாகாவுடன் நெருங்கிய நட்புறவு பெறும் வாய்ப்புஏற்பட்டது.

வ. சு,

# 'சுரம்–ஜுரம்–சுரம்'

[கழக இலக்கியச் செம்மல் புலவர் இரா. இளங்குமரன்]

(முன் இதழ் சஅ-ஆம் பக்கத் தொடர்ச்சி)

சுர் என்பதில் இருந்து பிறக்கும் சொற்களுள் ஒன்று 'சுருக்கு' என்பது. அது வலியையும், விரைவையும் குறிக்கும். 'சுருக்கென முள் தைத்தது' என்பது கேள்விப்படுவதே. உடலில் சில பகுதிகளில் ஏற்படும் குத்தல்களைச் சுருக்குச் சுருக்கெனக் குத்துவதாகக் கூறுவர். 'சுள்ளாஞ் சுருக்கு' என ஓர் உயிரி யுண்மை நாம் முன்னரே அறிந்ததே. 'சுருக்காக வா' என்னுர் எவர்?

சுர் என்பது 'சுருசுரு' என இரட்டைச் சொல்லாய் விரிந்து எரிவையும், ஊர்தலையும் குறிக்கும். தேட்கடி, பூரான்கடி, நட்டுவாய்க் காலியின் கடி, பாம்பின் கடி முதலியவற்றை 'சுருசுரு' என்று வலி ஏறுகின்றது என்பது வழக்கே. தீ, 'சுருசுரு' எனப் பிடித்து எரிவதாகக் கூறுவதும் வழக்கே.

சுடுபடும் பொருள் அல்லது காயும் பொருள் சுருங்குவது இயல்பு. இலைவாடிச் சுருங்குவதும், சுருக்கம் நிமிராமல் சுருண்டு போவதும் கண்கூடு. உடல்வாளிப்பும் குருதி வளமும் குன்றும் போது, தோற் சுருக்கம் உயிரிகளுக்கு உண்டாகிவிடுகிறது. பழுத்த பழங்களும், வெயிலடிபட்ட காய்களும், சூடுபட்ட கிழங்குகளும் பிறவும் சுருங்கிப் போகின்றன. ஆதலால் வெதுப்பத்தால் பொருள்கள் சுருங்குவதைத் தெரிந்துகொள்ளலாம்.

வெப்பக் கரணியம் கருதி இடப்பெற்ற இச் சுருளல் பெயர், பின்னே பொருளால் விரிந்து சுருள்பவற்றுக்கெல்லாம் ஆயிற்று. சிலருக்குக் குடுமியும் கூந்தலும் சுருட்டையாக விளங்குவதும், 'சுருட்டை சோறு போடும்' எனப் பழமொழி வழங்குவதும் அறிந்தனவே. சுருட்டைக்கு அழகுண்மை, சுருளா நிமிர் முடிய நம் தம் முடியைச் சுருட்டிச் சுருட்டி வளைத்து விடுவதால் அறியக் கிடக்கிறது.

சுருட்டையின் புகழ் ஒன்ரு? இரண்டா? சுருட்டைப் பாம்பு உண்டு; சுருட்டை விரியன் என்னும் பாம்பும் உண்டு; சுருட்டை என்னும் ஒருவகை இலைநோயும் உண்டு; சுருள்பவை எல்லாம் சுருட்டைகள்தாமே!

பழமையான சுருளலும் சுருட்டையும், புதுமைக் கோலமும் கொண்டன. சுருட்டு என்னும் பெயரில் புகைப் பொருள் ஒன்று

உண்டன்றோ! புனை சுருட்டு என்னும் பொய்ப்பழிச் சொல்லுக்கும் மூலமன்றோ சுருள்! பிறர் பொருளைக் கவர்வதைச், 'சுருட்டிக் கொண்டு போதல்' என்றும், இறந்துபோதலைச், 'சுருட்டிக் கொண்டு போய்விட்டது' என்றும் கூறுவதும் வழக்கேயன்றோ!

சுருட்டல், அல் மங்கலப் (அமங்கலப்) பொருளில் மட்டும் நின்றுவிடவில்லை. வெற்றிலையையும் ஓலையையும் சுருள் என்று பெயர் சொல்ல வைத்தது. திருமண அழைப்புக்குச் சுருள் வைத்து அழைத்தலும், திருமணப் பரிசு வழங்குதற்குச் சுருள் வைத்தலும் வழக்கே. சுருள் என்பது சுருட்டி வைத்த வெற்றிலையாகலின், அவ் வெற்றிலையை வைத்து அழைத்தலும் அவ் வெற்றிலையொடு பணம் வைத்துத் தருதலும் 'சுருள்' என்னும் பெயர் பெற்றன. சுருள் வைத்துஅழைத்துவிட்டால் பகை மறந்து உரிமையால் ஒன்றுபடுதல் வேண்டும் என்பது நம்மவர் கொள்கை.

சுருள் வழியே பிறந்த சுருணை என்னும் சொல்லுக்கும் ஓலைச் சுருள், வெற்றிலைச் சுருள் என்னும் பொருள்களும் உண்டு. இவற்றுடன் சுருள் வாளையும் சுருணை என்பது குறிக்கும். யானைத் தோட்டி வளைவுடையதாகலின் அதனையும் சுருணை என்பர்.

சுருட்டி என்பது ஓர் அராகம் (இராகம்). சுழலும் இசையமைதியால் பெற்ற பெயர் அது. சுருட்டி என்னும் பொது அராகத்தில் செஞ்சுருட்டி என்பது ஒரு சிறப்பு அராகம். கூத்தரங்கில் பயன்படுத்தப்பெறும் திரைக்குச் 'சுருட்டி' என்பது ஒரு பெயர். வேட்டியைச் சுருட்டிக் கட்டிக்கொண்டால் விரைந்து நடக்கலாம் என்பதை நடையர் நன்கு அறிவர். சுருட்டிக் கட்டிய வழக்கே, முழுக்கால் சட்டை, அரைக்கால் சட்டை ஆகியவற்றுக்கெல்லாம் முன்னோடி! உலக முழுவதும் பண்டு வழங்கிய அரசர் உடைகளை ஆய்ந்தால் இது தெளிவாகும்.

சுருட்டி மடக்கவும், விரிக்கவும் தக்க வகையில் அமைந்த சிவிறிக்குச் (விசிறிக்குச்) சுருட்டி என்பதும் பெயர். சுருங்கி என்பது ஒரு செடி; தொட்டாற் சுருங்கி என்பதும், தொட்டாற் சிணுங்கி, தொட்டால் வாடி என்பனவும் அதன் விளக்கப் பெயர்கள்.

ஆமை, 'சுருக்கி' என்னும் பெயரால் குறிக்கப்பெறும். அச்சம் நேரும் பொழுதில் கால்களையும் தலையையும் சுருக்கிக்கொள்வதால் சுருக்கிப் பெயர் பெற்றது அது. அறுகீரையாம் அறைக்கீரை, அறுத்தறுத்துச் சுருக்கமுறுவதால் அதனையும் சுருக்கி என்பர்.

வயிற்றையும் சுருக்கி, வாயையும் சுருக்கி, வலிமை வனப்புகளையும் சுருக்கி, அருமை பெருமைகளையும் சுருக்கும் வறுமையைச் சுருக்கி என்பது தேர்ந்த தெளிவால், நேர்ந்தளித்த கொடையே யாம்.

இனிச் சுருக்குதல் கணக்கையும், சுருக்கி எழுதும் மொழிப் பயிற்சியையும், சுருங்கச் சொல்லும் மொழியழகையும் கற்ருேர் எவரும் அறிவர். சுருக்குப் பையில் பணம் போட்டு இடையில் கட்டிக்கொள்ளுதல் முந்தையர் வழக்கு. சுருக்குப் போட்டுச் சாதலும் சாகடித்தலும் உலகெங்கும் வழங்கும் பொது வழக்கே.

சுர் என்பதனுடன் ஐகார ஈறு சேர்தலால் 'சுரை'யாகும். சுரையாவது துளை என்னும் பொருள் உடையது. அத் துளையும் புறத்துளையன்று; உட்டுளையாம். உட்டுளையுடைய கொடிகளைக் குறித்த சுரைப் பெயர், ஒருவகைத் தனிக் கொடிக்கு வழங்குவது பொதுச்சிறப்புப் பெயராம். 'மா' என்பது விலங்கு என்னும் பொதுப்பெயர்க்குரியது. ஆயினும் யானைக்குப் பொதுச் சிறப்புப் பெயராய் வழங்குவது போன்றது இது.

புறத்தே மூடி உள்ளே துளையுடைய ஒன்று உள்வெதுப்ப முடைமை தெளிவு. பொந்து, துளை, வளை, பொத்தல், பத்தல் என்பனவெல்லாம் சுரைப் பொருள் சார்ந்த சொற்களே. இவை யெல்லாம் உள்வெதுப்பமுடையவை என்பது கருதுக. 'சுரங்கம்' என்னும் சொல்லையும் கருதுக.

சுரை என்பது உள்வெதுப்பத்தின்மூலங் கொண்டு பிறந்த சொல்லாயினும், துளை என்னும் பொதுப்பொருளில் வழங்குவ தாயிற்று. அதனுல் காதணி, மூக்கணி, காலணி, தோளணி, கையணி முதலியவற்றின் பூட்டுவாய்ப் பொருத்துகளுக்குச் சுரை என்னும் பெயர் உண்டாயிற்று. சுரை இருந்தால், அதனைப் பூட்டி வைத்தற்கு ஆணி வேண்டுமே! அது 'சுரையாணி' என்னும் பெயர் பெற்றது. திருகாணி, ஓடாணி, பூட்டாணி, பொதுக்காணி என்பவை சுரையாணி வகைகளாம்.

சுர் என்பதில் இருந்து நாம் குறித்த இச் சொற்களும், குறித்துக் காட்டாத இன்னும் பல சொற்களும் பகுதி பகுதியாய்த் தொகுதி தொகுதியாய் இருந்தும், அடிக் கரணியம் திட்டத் தெளிவாகத் தெரிந்திருந்தும் சுரச் சொல்லை வட சொல்லாய்—வன்படியாய்க்—கையாள்வது நெஞ்சறிந்து செய்யும் வஞ்சமே யாம்! தமிழ்ப்பற்ருளரேனும் விழித்தால் அன்றி, இச் சூழ்ச்சிகள் ஒருநாளும் ஒழியா! 'உறங்கியவன்கன்று கடாக்கன்று' என்பது பழமொழி.

முற்றும்

# வேர்ச்சொற் கட்டுரைகள்

[பேராசிரியர் இரா. மதிவாணன்]

(முன் இதழ் ௨0ஆம் பக்கத் தொடர்ச்சி)

## 'இல்'—துளைத்தற்கருத்து வேர்ச்சொல்

இல்—இள்—இட்டு=குத்துதல். இட்டி—ஈட்டி.

தெ. இட்டிட (ஈட்டி) க. இட்டி (ஈட்டி).

இள்—இள—இட—இடத்தல்—பெயர்த்தல்.

இடவன்—பெயர்க்கப்பட்ட மண்கட்டி.

தெ. இடவலி (மண்கட்டி). "எந்தை யிடவன் எழவாங்கி எடுத்தமலை." (திவ். பெரியாழ். 3, 5, 1).

இடத்தல்—1. பிளவு படுதல் "களிறு வழங்கலி னிடந்த மண்" (கூர்ம. அருந்தக. ௨0.) 2. குத்தியெடுத்தல் (திவ். இயற். 1. 2). 3. தோண்டுதல். "கண்ணிடந் தப்ப" (பெரியபு. கண்ணப். 183). 4. பிளத்தல். "பொன் பெயரோன் மார்பிடந்த" (திவ். இயற். 1, 23). 5. பெயர்த்தல். "எயிற்றல் படையா விடந்து" (பு. வெ. 6, 13). 6. உரித்தல் (திவா.). 7. உரித்தல். "முத்துக்கள் தேய்ந்தனவும் தோலிடந்தனவும்" (3. 1. 1. 93, 49).

இடங்கணி—உளி, இடங்கம்—1. உளி, (தணிகைப். அகத். 69). 2. வாளின் உறை. 3. மண்தோண்டும் படை. (நாநார்த்த.)

இடங்கசாலை—அக்கசாலை, இடபம்—செவித்துளை, கற்சாணை. இடார்—இறைகூடை, எலிப்பொறி. 'இடாரி லகப்பட்ட எலிபோல' (உ. வ.)

இடா—பனங்கூடை, இறைகூடை.

இடங்கர்—முதலை, நீர்ச்சால்; சிறுவழி.

தெ. டொங்க (சிறுவழி). இடங்கணப் பொறி—கோட்டை மதிற்பொறி (சிலப். 5, 210 உரை).

இடால்—வெட்டுதல். "கண்ட கோடாரியைப் போல் ஏந்து வெள்ளைப் பக்கறை யிடாலினன்" (விறலிவிடு. 49). ம. இடல் (துன்பம்). இடர்—துன்பம்.

க. எடர்; தெ. எடரு. கோத. இட். து. இட்.

து. எடபுனி. இடாசுதல்—தாக்குதல்.

க. இடகு. தெ. டீகொனு. ம. இடம்புக—தடைப்படல்.

இடம்புதல்—விலகுதல். தெ. இடம்பரம்—அகலம். இடத்தல்—பெயர்த்தல், பிளத்தற் கருத்துகளிலிருந்து விலகற்கருத்தும் விலகற் கருத்தினின்று சிறிதகன்ற அல்லது பெரிதகன்ற சமமான இடப்பரப்புக் கருத்தும் தோன்றும், இடம்—1 தங்குமிடம், வீடு (திவா.), 2. சூழல், இடம் பார்த்துப் பேசு (உ வ.), 3. காரணம். அப்படிச் சொல்வதற்கு இடமுண்டா? 4. வானம் (திவா.) 5. இடப்பக்கம், "வேங்கை இடம் வீழ்ந்த துண்ணாது" (நாலடி. 300). 6. அளவு, "உகலிடந்தான் சென்று" (திருக்கோ. 42). 7. ஆடையின் அகலமுழம். 8. பொழுது "அகலிரு விசும்பிற் பகலிடந்தரீஇயர்" (பதிற். 52, 38). 9. ஏற்றபொழுது. "நாடொறும் இடம் பெறுமல்" (திருவாலவா. 35, 8). 10. செல்வம் "இடமில்லாக் காலும் இரவொல்லாச் சால்பு" (குறள், 1064). 11. வலிமை (பிங்.) 12. படுக்கை (பிங்.) 13. தொலைவு "திருநாவால் எத்தனையிடம் போரும்" (ஈடு, 9, 8, 11). 14. ஏழன் உருபு, அவனிடம் (நன். 302).

ம இடம். க., து. இடெ., தெ, எடெ, எடமு—கோத. எட்ம். தூட. இட்ண. குட. எடெ—து, இட.

இடங்கொடுத்தல்—பிடி கொடுத்தல், கண்டிப்பின்றி நடக்கவிடுதல். இடங் கொள்ளுதல்—1 பரவுதல் "இடங்கொள் சமயத்தை யெல்லாம்" (திவ், திருவாய்-5, 44). 2 இடம்பற்றுதல், சாது மிரண்டால் காடு இடங்கொள்ளாது (உ. வ) 3 அகலமாதல் "இடங்கொள் பூதலம்" (நைடத, நகர 16). 4. வாழ்விடங் கொள்ளல். "இறைவனே நீயென் உடலிடங் கொண்டாய்" (திருவாச, 22, 3).

இடங்கோலுதல்—ஊன்ற இடஞ்செய்து கொள்ளுதல். இடத்தகைவு—இடம் விட்டுப் பெயராதபடி இடும் ஆணை (சங். அக.)

இடத்தை—இடப்பக்கம் பூட்டும் மாடு.

இடநாகம்—அடைகாக்கும் நாகம். (சங். அக).

இடப்படி—ஓர் அடி வைப்புத் தொலைவு.

இடப்புக்கால்—அகல வைத்த கால். இடமானம்—1. அகலம். 2. அகன்ற பெருமாளிகை. 3. இரட்டைப்பறை.

(திருநெல். 4. விட்டுணு. 25) தெ. டமாரமு (இடமானம்—டமானம்).

இடம்படல்—1. அகலித்தல். "இடம்பட வீடெடேல்" (ஆத்திசூ.). 2. மிகுதியாதல், "இடம்பட மெய்ஞ்ஞானம் கற்பினும்" (நாலடி. 116).

அகலித்தற் பொருட்டாய இடம்பல் அளவிறந்து நடக்கும் செருக்குள்ளவனைக் குறிக்குங்கால் இடம்பன் என 'அன்' ஈறு பெறும்.

இடம்பன்—செருக்கன் "இடம்பனை யழைத்து" (பிரபோத. 24). இடம்பம்—டம்பம்—ஜம்பம். இடம்பம் மராட்டிய மொழியில் 'ஜம்ப' என வழங்குகிறது. மரா. ஜம்ப, டம்ப அறியாதார் இதனை மராட்டியத்திலிருந்து தமிழுக்கு வந்த சொல்லெனக் கருதுவர். மராட்டியம் தமிழிலிருந்து பெற்றுத் திரித்திக் கொண்ட சொல்லே என்பதில் ஐயமில்லை.

இடாம்பிகன்—இடம்பம் செய்பவன்.

"இடாம்பிகரோடும் புக்குநீ" (பிரபோத. 24. 6, 7).

இடம்பாடு—1. அகலம். 2. செல்வம்.

"இடம்பாடுள்ளவன் அவன்" (இராட்.)

இள—இள—இட — இடத்தல் — தாழ்த்தல், கீழிருத்தல், கீழ்ப்படுத்தல்.

ம. இடக்கல்லு—அடிக்கல், புதிதாகக் கட்டும் வீட்டிற்கு அடிக்கல்விடுதல்.

இடக்குடி—கீழ்க்குடி.

இடக்காணக்காரன்—கீழ்க் குத்தகைக்காரன்.

இடக்காழி—ஆற்றின் கீழ் வாய்க்கால்.

இடக்கு—நாழிகை வட்டில் வடிவில் செய்த தோற்கருவி.

இடக்கர்—மலவாய்க் காற்று.

இடம்பு—கவிழ்ந்து விழு.

க. எடவட்டன்—மூடன், ஒழுங்கு தவறியவன், கீழானவன்.

———

# பாரதி போற்றிய திருக்குறட்பாக்கள்

[பன்மொழிப் புலவர், மு. சதாசிவம், க. மு. இலக்.]

திருக்குறள் உலகளாவிய ஒரு நூல் என்பதை உலகுக்குணர்த்தவே பாரதியார்,

'வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து
வான்புகழ் கொண்ட தமிழ் நாடு'

என்று பாடினார். அவருடைய உள்ளம் திருக்குறளில் ஆழ்ந்து தோய்ந்திருக்கவேண்டும் என்பதில் ஐயமில்லை. பாரதியார் தம் கவிதைகளிலும் கட்டுரைகளிலும் மேற்கோளாக எடுத்துக் காட்டிய குறட்பாக்கள் எவை என்பதை அறியலுறின் அவை பாரதியாரின் ஆழ்ந்த உள்ளத்தை அறிந்துகொள்ள ஓரளவு துணைபுரியும்.

'தமிழச்சாதி' என்ற தலைப்பிட்ட பாட்டில் பாரதியார்,

"திருக்குற ளுறுதியும் தெளிவும் பொருளின்
ஆழமும் விரிவும் அழகும் கருதியும்,
...............முன்புநான் தமிழச்
சாதியை அமரத்தன்மை-வாய்ந்தது என்று
உறுதிகொண் டிருந்தேன் '

என்று பாடுங்கால் திருக்குறளின் ஐந்து பண்புகளைத் தெள்ளிதின் எடுத்துப் போற்றுகிறார். அவையாவன: 1. திருக்குறள் உறுதிப் பொருள்களை உள்ளத்தில் உறுதியாகப் படும்படி உரைப்பது, 2. திருக்குறள் திருவள்ளுவர்தம் உள்ளத்தில் உலாவிப் பின் நீண்டகாலச் சிந்தனையின் விளைவாகத் தெளிந்து பிறந்த கருத்துக்களைக் குழப்பத்திற்கோ முரண்பாட்டிற்கோ இடமின்றித் தெளிவாகக் கூறுவது, 3. திருக்குறள் அளவில் குறுகியதாயினும் பொருளில் ஆழம் மிக்கது, 4. திருக்குறள் ஒன்றேமுக்கால் அடிகளைக் கொண்டிருப்பினும் உலகெலாம் வியந்து போற்றத்தக்க வகையில் காலந்தோறும் புதுப் புதுப் பொருள்களை நல்தவது; எத்துணை உரையாசிரியர்கள் தோன்றினும் அத்துணைப் பேரும், 'நவில்தொறும் நூல்நயம்' பயக்கும் குறட்பாக்களுக்குப் புத்துரைகள் படைத்து மகிழத் தக்கவாறு விரிவான பொருள்களைக் கொண்டுள்ளது; 'நூலன்வே யாருமாம் நுண்ணறிவு' என்பதுபோல் ஒவ்வொருவரும் தத்தம் அறிவுத்திறனுக்கேற்பவும், பட்டறிவுக் கேற்பவும் பரந்து

விரிந்து செல்லுதற்கு இடந்தருவது. 5. சொல்லிலும், பொருளிலும், குறளின் முறைவைப்பிலும் அதிகார முறை வைப்பிலும், சொற்பொருளமைப்புக்களிலும், கருத்தமைதியிலும், சிந்தனைப் போக்கிலும் நூலமைப்பிலும் நடையிலும் உலகம் அவாவத்தக்க தமிழ்ப்பண்பாட்டினை எடுத்து உணர்த்துவதிலும் பல்வேறு அழகுகளைப் பாங்குறக் கொண்டு இலங்குகிறது.

திருக்குறளின் மாட்சிகளையெல்லாம் ஐந்து சிறிய சொற்களில்—உறுதி, தெளிவு, ஆழம், விரிவு, அழகு—என்ற சொற்களில் அடக்கிக் காட்டியுள்ள பாரதியார் குறட்பாவைப்போலவே இரண்டடிகளிலேயே பல கருத்துக்களைச் செறித்துக் காட்டியிருப்பது வியந்து இன்புறற்பாலதொன்றும். (இந்தவிடத்தில் பாரதியார் சிலப்பதிகாரத்தை ஒரு வரியிலும் திருக்குறளை இரண்டு வரிகளிலும் கம்பராமாயணத்தை மூன்று வரிகளிலும் புகழ்ந்து போற்றியுள்ளார்.)

பாரதியாரின் உள்ளத்தில் வள்ளுவரும், இளங்கோவடிகளும், கம்பரும் நீங்கா இடத்தைப் பெற்றிருந்தனர் என்பது 'தமிழ்' என்ற தலைப்பில் உள்ள,

"யாமறிந்த புலவரிலே கம்பனைப் போல்
வள்ளுவர் போல் இளங்கோ வைப்போல்
பூமிதனில் யாங்கணுமே பிறந்ததில்லை;
உண்மை வெறும் புகழ்ச்சி யில்லை"

என்ற வரிகளிலிருந்து எளிதில் உணரப்படும்.

மேற்குறிப்பிட்ட ஈரிடங்களிலும் வள்ளுவரை நடுவிடத்தில் வைத்தே பேசும் பாரதியாரின் உள்ளத்தில் "நடுவணது எய்த இருதலையும் எய்தும்" என்ற தொல்காப்பிய நூற்பா இழையோடிக்கொண்டிருந்திருக்க வேண்டும். உண்மை வரலாறினும் கற்பனைக் காப்பியமாயினும் இரண்டிற்குத் திருக்குறள் வழிகாட்டியாக அமைந்துள்ளது என்பதே பாரதியாரின் உள்ளக் குறிப்பாகும். மேலும் பாரதியார் தம் "சுயசரிதை"யில் "தெய்வ வள்ளுவன் வான்மறை செய்ததும்" என்று புகழ்ந்துரைத்துள்ளார்.

இனித் திருக்குறளை வாழ்க்கையிலக்கண நூலாகக் கருதிய பாரதியார் எடுத்தாண்ட குறட்பாக்கள் எவையெனக் காண்போம்:

திருக்குறளின் ஐந்து சிறந்த பண்புகளை எடுத்துக் கூறிய அதே பாட்டிலேயே பாரதியார் சில திருக்குறட் கருத்துக்களைக்

கையாண்டுள்ளார். 52 ஆம் வரியாகிய 'வானம் பொய்க்கின் மடிந்திடும் உலகுபோல்' எனபது 'நீரின்று அமையாது உலகு' என்ற குறட்கருத்தை (குறள் 20) விளக்குகிறது. உண்மையில் பாரதியாரின் 'வானம் பொய்க்கின்' என்ற தொடர் 19 ஆவது குறட்பாவில் உள்ள 'வானம் வழங்கா தெனின்' என்ற தொடரின் மறுபதிப்பேயாகும். 'வானம் பொய்க்கின்' என்ற தொடரைப் பயன்படுத்திய பாரதியார் அத்தொடர் இடம்பெறும் 19 ஆம் குறட்பாவின் கருத்துக்களையும் எடுத்துக் கூறிவிட விழைந்துள்ளார். அதனால்தான் அடுத்த 53, 54 ஆவது வரிகளிலேயே 19 ஆம் குறட்பாவின் கருத்தினை எடுத்து மொழிந்துள்ளார்:

"தானமுந் தவமும் தாழ்ந்திடல் பொறுத்து
ஞானமும் பொய்க்க நசிக்குமோர் சாதி."

("தானந் தவமிரண்டும் தங்கா வியனுலகம் வானம் வழங்கா தெனின்" என்பது 19 ஆம் குறட்பா ஆகும்)

'ஞானமும் பொய்க்க நடுக்கும்' என்ற பாரதியாரின் தொடர் "சிறப்பொடு பூசனை செல்லாது வானம் வறக்குமேல் வானோர்க்கும் ஈண்டு' என்ற குறளையும் (18) நினைவூட்டுகின்றது.

மேலும்,

எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு (110)

என்ற குறள் பாரதியாரின் அதே பாடலில் கீழ்க்கண்ட வரிகளில் இழையோடிச் செல்வதை உணர்ந்து இன்புறலாம்:

"அறிவுத் தலைமை யாற்றிடும் தலைவர்
மற்றிவர் வகுப்பதே சாத்திர மாகும் —
இவர் தாம்,
உடலும் உள்ளமும் தம்வச மிலராய்
நெறி பிழைத் திகழ்வுறு நிலைமையில் வீழினும்
பெரிதிலை; பின்னும் மருந்திதற் குண்டு;
செய்கையுஞ் சீலமுங் குன்றிய பின்னரும்
உய்வகைக் குரிய வழிசில உளவாம்
மற்றிவர்,

சாத்திரம்—(அதாவது, மதியிலே தழுவிய கொள்கை, கருத்து, குறிக்கோள், நோக்கம்--இங்கிதில் கலக்க மெய்திடு மாயின் மற்றதன் பின்னர் மருந்தொன்றும் இல்லை.

(தமிழச் சாதி 60 - 72)

உலகுக்கு ஒரு பெருநெறி காட்டிய வள்ளுவப் பெருந்தகை யாரின் வழியைப் பின்பற்றிடின் தமிழகம் வாழும் என்ற கருத்தையே பின்வரும் வரிகள் உணர்த்துகின்றன :

"நமது மூதாதையர் நயமுறக் காட்டிய
ஒழுக்கமும் நடையும் கிரிகையும் கொள்கையும்
ஆங்கவர் காட்டிய அவ்வப் படியே
தழுவிடின் வாழ்வு தமிழர்க் குண்டு'

(தமிழச் சாதி 106—109)

'சுதந்திரப் பயிர்' என்ற பாட்டிலுள்ள 'வானமழையில்லை யென்றால் வாழ்வுண்டோ?' என்ற வரி,

"நீரின்று அமையாது உலகுஎனின் யார்யார்க்கும்
வானின்று அமையாது ஒழுக்கு" (20)

என்ற குறட்பாவையே மீண்டும் நினைவூட்டுகின்றது.

இதே பாட்டில் உள்ள இருவரிகள் :

"நெஞ்சகத்தே பொய்யின்றி நேர்ந்ததெலாம் நீ தருவாய்
வஞ்சகமோ எங்கள் மனத்தூய்மை காணாயோ?"

என்பவை

"மனத்துக்கண் மாசிலன் ஆதல் அனைத்தறன்"

என்ற குறளையும் நினைவூட்டுகின்றன.

'சுதந்திரப் பள்ளு' என்ற தலைப்பில் உள்ள

"உழவுக்கும் தொழிலுக்கும் வந்தனை செய்வோம்"

என்ற வரி,

"உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்மற் றெல்லாம்
தொழுதுண்டு பின்செல் பவர்"

என்ற குறளை நினைவூட்டுகின்றது.

'சத்திரபதி சிவாஜி'யைப் போற்றிப் புகழ்ந்துரைக்கும் பாடலில்,

"எதிரிகள் ஊனுக்குற இடித்திடு பதாதிகாள்!
வேலெறி படைகாள்! சூலெறி மறவர்காள்!
கால னுருக்கொளும் கணை துரந்திடுவீர்"

என்ற வரிகள்,

"கூற்றுடன்று மேல்வரினும் கூடி எதிர்நிற்கும்
ஆற்ற லதுவே படை (75)

என்ற குறளை அடியொட்டியதாக அமைந்துள்ளன.

'பூபேந்திரர் விஜயம்' என்ற பாட்டில் உள்ள 'இன்னாத-தீர்க்கெண்ணான்' என்ற தொடர்,

"இன்னா எனத்தான் உணர்ந்தவை துன்னாமை
வேண்டும் பிறன்கண் செயல்" (316)

என்ற குறளை நினைப்பிக்கிறது.

'விநாயகர் நான்மணிமாலை'யில் 37 ஆவது பாட்டின் பிற்பகுதி:

"வையகத்தில் அன்பிற் சிறந்த தவமில்லை; அன்புடையார்
இன்புற்று வாழ்தல் இயல்பு"

என்பது;

"அன்புற் றமர்ந்த வழக்கென்ப வையகத்து
இன்புற்றார் எய்துஞ் சிறப்பு"

என்ற திருக்குறள் பாரதியாரின் உள்ளத்தடத்தில் ஊறியிருந்த பான்மையினைக் காட்டுகிறது.

"பேதைப் படுக்கும் இழவூழ்" (372)

"ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று
சூழினும் தான்முந் துறும்" (380)

என்ற குறட்பாக்களின் கருத்துக்கள் பாரதியாரின் உள்ளத்தில் படிந்திருந்தன. அவை 'பாஞ்சாலி சபத'த்தில் 'விதியினால் அத்தருமனும் வீழ்ந்த'தைக் குறிப்பிடும்போது வெளிப்படுகின்றன.

"மதியி னும்விதி தான்பெரி தன்றோ!
வைய மீதுள வகுப்வற்றுள்
விதியி னும்பெரி தோர்பொரு ளுண்டோ?

(தொடரும்)

———

"எண்ணிய எண்ணியாங்கு எய்துப எண்ணியார்
திண்ணிய ராகப் பெறின்" —குறள்-666

இந்தக் குறட்பாவுக்கு எடுத்துக் காட்டாக விளங்குபவர் இந்தக் கட்டுரையாசிரியர்.

# வரலாற்றுக்கு முற்பட்ட ஓவியம்

[பி. எல். சாமி, ஐ. ஏ. எசு.]

அண்மையில் விழுப்புரத்திற்கு அருகில் உள்ள கீழவாலை என்ற ஊரில் வரலாற்றுக்கு முற்பட்ட பாறை ஓவியங்கள் கண்டு பிடிக்கப்பட்டுள்ளன. இந்தியாவில் முதன்முதலில் மத்தியப் பிரதேசத்தில் "பிம்ப்டெக்" என்ற ஊரில்தான் பாறை ஓவியங்கள் கிடைத்தன. பின்னர் வேறு சில பாறை ஓவியங்களும் கிடைத்தன. தமிழ்நாட்டில் ஆனை மலையில் உள்ள மறையூர் என்ற இடத்திலும், கிருஷ்ணகிரியிலும் இத்தகைய ஓவியங்கள் கிடைத்திருக்கின்றன. ஆனால் புதுவை வரலாற்றுக் கழகம் கண்டுபிடித்த பாறை ஓவியம் மிகவும் வரலாற்றுச் சிறப்பானதும் முக்கியமானதும் ஆகும். ஏனென்றால் இந்த ஓவியத்தில்தான் சிந்துவெளி நாகரிக முத்திரை எழுத்துக்கள் மூன்று ஓவியங்களில் காணப்படுகின்றன. குஜராத்தில் லோத்தால் என்ற இடத்திற்குக் கீழ் இந்த உருவ



எழுத்துக்கள் காணப்படாமையால் சிந்துவெளி நாகரிகத்துக்கும், திராவிடருக்கும் தொடர்பு கிடையாது என்று சில வடநாட்டு வரலாற்று ஆராய்ச்சியாளர்கள் சாதித்து வந்தனர். மறைந்த மாமேதை (Dr. Heras) இராசு அடிகள் கருத்தைச் சாடினர். திரு. ஐராவதம் மகாதேவன், ஐ. ஏ எஸ். அவர்கள் முதலில் இராசு அடிகளை ஒட்டிச் சிந்துவெளி முத்திரை எழுத்துக்கள் திராவிடரோடு தொடர்புடையன என்றார். அப்புறம் computer வழியாக ஆராய்ந்து அவை திராவிடருடன் தொடர்புடையவை என்று உறுதியாகச் சொல்ல முடியாது என்று கூறினார். ஆனால் பாலி, பிராகிருதம், சமஸ்கிருதம் ஆக இருக்க முடியாது என்று எழுதினர்.

புதுவை வரலாற்றுக் கழகம் கண்டுபிடித்துள்ள ஓவியத்தில் காணப்படும் ஐந்து எழுத்துக்களும், சிந்துவெளி நாகரிக முத்திரைகளில் காணப்படுகின்றன என்பது மிகவும் வியப்புக்குரியதாகும்; இஃது ஒரு மாபெரும் கண்டுபிடிப்பும், இந்திய வரலாற்றையே புரட்சிகரமாக மாற்றக்கூடியதும் ஆகும்; சிந்துவெளி நாகரிகம் ஆரியருடையது என்று முனைந்து கூறியவர்களின் தப்புரையைச் சாடித் தீர்ப்பதாகும்.

காலஞ்சென்ற (Dr. Heras) இராசு அடிகளிடம் படித்த என்னுடைய தமையனார் கொண்டிருந்த எழுதிய கருத்துக்கள் இந்த ஓவிய எழுத்துக்களால் எண்பிக்கப்பட்டுள்ளன. தமிழ் இலக்கணத்தில் யாப்பருங்கலக்காரிகை உரை பலவகை எழுத்துகளைக் கூறியுள்ளது. அந்த எழுத்துகளில் கீழ்வாலையில் காணப்படும் எழுத்துகள் கண்ணெழுத்தாக இருக்கலாம். இந்தக் குகை ஓவியங்களைத் தமிழக அரசு நன்கு கண்காணிப்பதோடு, பாதுகாக்க வேண்டும்.

கருவி நூல்கள் :

1. Studies in proto - Indo - Mediterranian culture, Volume I by Rev. Fr. Heras, s. j, Director Indian Historical Research Institute, Bombay.
2. The Dravidian Problem in the South Indian culture complex by V. Joseph, Orient Longman.

---

## பைந்தமிழ்ப் பாவலர் அ கி பரந்தாமனார் அவர்களின் 80 ஆம் பிறந்தநாள் விழா

புரசை சுந்தரர் தமிழ்க் கல்லூரி இயக்குநரும், மதுரை தியாகராயர் கல்லூரி முன்னாள் தமிழ்ப் பேராசிரியருமான பைந்தமிழ்ப் பாவலர் திரு அ. கி. பரந்தாமனார் அவர்களின் 80ஆம் பிறந்த நாள் விழா 15-6-'82 அன்று மாலை, சென்னைப் புரசைவாக்கம் கங்காதரீசுவரர் கோவில் தெருவிலுள்ள நகராண்மைக் கழக உயர்நிலைப் பள்ளியில் மிகச் சீரும் சிறப்புமாக நடைபெற்றது. பல்கலைக் கழக முன்னாள் துணைவேந்தர் உயர்திரு நெ. து. சுந்தரவடிவேலனார் அவர்கள் விழாவிற்குத் தலைமை தாங்கினர். கல்லூரிச் செயலர் வித்வான் க. வ. சச்சிதானந்தம் வரவேற்புரை நிகழ்த்தினர். பேராசிரியர்கள் ச. சாம் சிவனர் டாக்டர் இரா. மாயாண்டி, ஆ சிவலிங்கனர், பே.வே சக்கரவர்த்தி, திருவாளர்கள் அ. சாபக், அ. இராமமூர்த்தி ஆட்சிமொழிக் காவலர் கீ இராமலிங்கனர் ஆகியோர் பைந்தமிழ்ப் பாவலரின் தமிழ்ப்பணியினைப் பாராட்டிச் சிறப்புரை ஆற்றினர் கல்லூரித் துணைச்செயலர் புலவர் அ. சங்கர் நன்றி நவில விழா இனிது நிறைவுற்றது. பைந்தமிழ்ப் பாவலரவர்கள் நூறும் பல்லாண்டுகள் வாழ எம்முடைய வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

# நாமக்கல் குடைவரைக் கோயில்கள்

[தி. இராசமாணிக்கம், பி ஏ., பி. காம்., விசாரத்,
கூட்டுறவுப் பதிவாளர் (ஓய்வு)
23, கல்யாண்ஜி வீதி, பொள்ளாச்சி.]

(முன் இதழ் சடுஉ ஆம் பக்கத் தொடர்ச்சி)

கருவறைக்கு இடப் புறம் திருமாலின் திரிவிக்ரம வடிவம் உருவாக்கப்பட்டுள்ளது.

''அருமா நிலம் அன்று அளப்பான் குறளாய்
அவுணன் பெருவேள்வியில் சென்றிரந்த
பெருமான்''

என்ற மங்கை மன்னன் திருவாக்கிற்கு ஏற்ப மாவலியிடம் பிச்சை இரக்கும் வாமனனின் வடிவம் ஒரு பக்கம் அமைக்கப்பட்டுள்ளது. மற்றுமொரு புறத்தில் மாவலி தானம் கொடுப்பதினின்றும் தடுக்க முயலும் மாவலியின் குரு சுக்கிராச்சாரியைக் கருடன் அடிப்பது போன்று உருவாக்கப்பட்டுள்ளது. புடைசிற்பத்தில் குதிரை காணப்படுவது இந்நிகழ்ச்சி அசுவமேதயாகம் நடக்கும் இடத்தில் நிகழ்வதைக் குறிக்கிறது.

''மாவலி வேள்வியில் மாணுருவாய்ச் சென்று
மூவடி தாவென்று இரந்த இம்மண்ணினை
ஓரடியிட்டு இரண்டாம் அடி தன்னிலே
தாவடியிட்டான்...''

என்று பெரியாழ்வார் குறிப்பிட்டாற் போன்று விண்ணை அளக்கும் திரிவிக்ரம வடிவம் கலையழகுடன் உருவாக்கப்பட்டுள்ளது. தலையில் மணிமகுடம் காணப்பட, பின்வலக்கையில் கத்தி, பின்இடக் கையில் சங்கு உள்ளன. சங்கு கையின்மேல் தனியாகக் காணப் படுகிறது. முன் இடக்கை கத்யவலம்பக முத்திரையில் (தொங்கும் நிலையில்) உள்ளது.

''என்னிதுமாயம் என்னப்பன் அறிந்திலன்
முன்னைய வண்ணமே கொண்டு அளவாய் என்ன
மன்னு நமுசியை வானில் சுழற்றிய
மின்னு முடியனே''

என்ற பெரியாழ்வார் வாக்கிற்கேற்ப நமுசியை வானில் சுழற்றிப் பிடித்த நிலையில் முன்வலக்கை காணப்படுகிறது. நமுசியை

கப்பிய கைகளுடன் திரிவிக்ரம வடிவின் காலருகில் காட்ட வேண்டும் என்று ஆகமங்களில் சொல்லப்பட்டுள்ளது இங்குக் குறிப்பிடத்தக்கது. நமுசிக்கு அருகில் ஜாம்பவான் காணப்படுகிறார். இந்த வடிவத்தில் பொதுவாக வலக்கால் ஊன்றி இருக்க இடக்கால் மேலே தூக்கி இருக்கும். ஆனால் இங்கு இடக்கால் ஊன்றி இருக்க வலக்கால் மேல் தூக்கி இருக்கிறது. இஃது இந்தக் கோயிலின் இன்னுமொரு சிறப்பு.

திரிவிக்ரம வடிவினை ஒட்டி "ஏனத்து உருவாகி நிலமங்கை யெழில் கொண்டான்" புதை சிற்பமாக உருவாக்கப்பட்டுள்ளான். ஆகமங்களில் வராக (பன்றி) வடிவம் பூவராகம், யக்ஞவராகம், மற்றும் பிரளயவராகம் என மூன்று வகை கூறப்பட்டுள்ளது. அவற்றில் இங்குப் பூவராகம் அமைக்கப்பட்டுள்ளது. முகம் மட்டும் வராகமாகவும் ஏனைய உறுப்புகள் மானிட வடிவிலும் உள்ளது. ஆகமங்களில் நான்கு கைகள் சொல்லப்பட்டிருப்பினும் இங்கு உள்ள வடிவிற்கு இரண்டு கைகள்தாம் உருவாக்கப்பட்டுள்ளன. வலக்கைமேல் மண்மகள் கூப்பிய கைகளுடன் அமர்ந்து இருக்க அவள் கால்களை இடக்கை தாங்கிக்கொண்டு இருக்கிறது. நான்கு வேதங்கள் மானிட உருவில் வராகத்தின் தலைக்கு மேல் காணப்படுகின்றன. வராகத்தின் காலடியில் பாம்பும் அதன் துணையும் அமைக்கப்பட்டுள்ளன. இது வராகம் பாதாள லோகத்தினின்றும் மேலே வருவதை எடுத்துக் காட்டுகிறது.

மலையின் கீழ்ப்புறமாகவுள்ள குடைவரையின் முகப்பில் உள்ள இரு தூண்கள் மேலும் கீழும் சதுரமாகவும் நடுவில் எட்டுப் பட்டை கொண்டதாகவும் பகுக்கப்பட்டுள்ளன. சதுரங்களில் தாமரை இதழ்கள் காணப்படுகின்றன. இரண்டாவது வரிசையில் உள்ள நான்கு தூண்களில் நடுவில் உள்ள இரு தூண்கள் மட்டும் மேலும் கீழும் சதுரமாகவும் நடுவில் எட்டுப் பட்டை கொண்டதாகவும் பகுக்கப்பட்டுள்ளன. சதுரங்களில் தாமரை இதழ்கள் செதுக்கப்பட்டுள்ளன. தூண்களுக்கு இடையில் நடுவில் பட்டையுடன் கூடிய தரங்கப் போதிகைகள் உருவாககப்பட்டுள்ளன. இரண்டாவது வரிசைத் தூண்களுக்குக் கீழ் அதிட்டானம் என்ற அமைப்பும் மேலே கபோதமும் செதுக்கப்பட்டுள்ளன. கந்தர்வர்கள் தலைகளுடன் கூடிய ஆறு கூடுகள் கபோதத்தில் உருவாக்கப்பட்டுள்ளன. முகப்பிற்கு முன்பு மரத்தாலான கொடுங்கை போன்று மலையிற் குடைந்து அமைக்கப்பட்டிருக்கிறது. இஃது இந்தக் கோயிலில் உள்ள ஒரு சிறப்பாகும்.

"திருமாது வாழ் வாட்டமில் வனமாலை மார்பன்" கருவறையில் பாம்பணையில் கிழக்கு நோக்கிப் பள்ளி கொண்டுள்ளான். பள்ளி கொண்டிருக்கும் கோலம் திருமாலுக்கு உரிய ஒன்றாகும். இவனுடைய இரு கைகளில் ஒன்று நீட்டியும் மற்றொன்று கடக முத்திரையிலும் காணப்படுகிறது. நாபியில் நான்முகனும் வலப் புறமும் இடப் புறமும் சூரிய சந்திரர்களும் அமைக்கப்பட்டுள்ளனர். காலடியில் மது கைடபர்கள் என்ற தானவர் காணப்படுகின்றனர். ஆதிசேடன், கார்க் கோடகன், தட்சன் எனப் பல பாம்பு அரசர்கள் புராணங்களில் குறிப்பிடப்படுகின்றனர். பொதுவாகத் திருமால் ஆதிசேடனாகிய பாம்பின்மேல் பள்ளி கொள்பவனாக உருவாக்கப் படுகிறார். இதை அனந்த சயனம் என்பர். அனந்தனது உடலும் தலையும் பாம்பு போன்று இருக்கும். இங்குள்ள பாம்பு கார்க்கோடகன் எனப்படுகிறது. இது பாம்பின் உடலையும் சிங்கத்தின் தலையையும் கொண்டது. இதைக் கார்க்கோடக சயனம் என்பர். இது இங்குள்ள கோயிலின் மற்றுமொரு சிறப் பாகும்.

கருவறையை ஒட்டி வலப் புறமாக,

"பொல்லாக் குறளுருவாய்ப் பொற்கையில் நீரேற்று
எல்லாவுலகும் அளந்து கொண்ட வெம்பெருமான்"

வடிவம் புடைப் சிற்பமாக அமைக்கப்பட்டுள்ளது. வாமனனின் ஒரு கையில் குடையும் மற்றொரு கை மாவலியிடம் தானம் பெற நீட்டிய நிலையிலும் உள்ளன. இங்குள்ள வாமனனின் வடிவம் நரசிம்மர் குடைவரைக் கோயிலில் உள்ள வடிவத்தைவிட இளைஞனாகக் காட்டப்பட்டுள்ளது. திரிவிக்ரம வடிவில் இடக் கால் ஊன்றி இருக்க வலக் கால் மேலே தூக்கி அமைக்கப்பட்டுள்ளது. நான்கு கைகளில் முன்வலக்கை நீட்டி இருக்க முன்இடக்கை கத்யவலம்பித முத்திரையில் இடுப்பின்மீது வைக்கப்பட்டுள்ளது. பின் இடக்கைமேல் சங்கு தனியாகக் காட்டப்பட்டுள்ளது. மார்பில் முப்புரி நூலும் தலையில் மணிமகுடமும் காணப்படுகின்றன. ஆடையின் மடிப்பு தெளிவாகத் தெரிகிறது. திரிவிக்ரம வடிவிற்கு மேல் ஜாம்பவானும் கந்தர்வர்களும் உருவாக்கப்பட்டுள்ளனர்.

கருவறையின் இடப்புறத்தில் பால நரசிம்மர் நான்கு கைகளுடன் செதுக்கப்பட்டுள்ளான். பின்வலக்கைமேல் சக்கரமும் பின்இடக்கைமேல் சங்கும் தனியாகக் காட்டப்பட்டுள்ளன. முன் இடக்கை கத்யவலம்பித முத்திரையில் உள்ளது.

நரசிம்மரை ஒட்டிச் சங்கர நாராயண வடிவம் காணப்படுகிறது. நான்கு கைகளில் பின்வலக்கையில் மான், முன்வலக்கையில்

பாம்பு, சிவனைக் குறிக்கப் பின் இடக்கை மேல் தனியாக உள்ள சங்கு திருமாலைக் குறிப்பிடுகிறது. முன் இடக்கை கத்யவலம்பித முத்திரையில் உள்ளது. தலையில் வலப் பாகத்தில் சடை மகுடத்தில் முற்று வெண் திங்கள் இருக்க இடப் பாகத்தில் மணி மகுடம் காணப்படுகிறது. இருபுறமும் தேவர்கள் நின்ற நிலையில் உருவாக்கப்பட்டுள்ளனர். அவர்களுடைய தூக்கிய கைகள் வியப்பினைத் தெரிவிக்கிறது.

தமிழகத்தில் குடைவரைக் கோயில்களை முதன்முதலில் தோற்றுவித்த பேறு பெற்றவன் பல்லவப் பேரரசனான மகேந்திர வர்மன். பல்லவர்களைப் பின்பற்றிப் பாண்டியர்களும் முத்தரையர்களும், அதிகமான்களும் தங்கள் தங்கள் பகுதிகளில் குடைவரைக் கோயில்களை உருவாக்கினர். இவர்களில் அதிகமான்கள் தற்காலத் தருமபுரியான-தகடூரைத் தலைநகராகக் கொண்டு வட கொங்கு நாட்டில் கோலோச்சியவர்கள். வட கொங்கு நாட்டில் தற்காலச் சேலம் மாவட்டம் அடங்கும். நாமக்கல் குடைவரைக் கோயில்கள் மட்டும் அதிகமான்களால் உருவாக்கப்பட்டதாகத் தெரிகிறது. இவை அதிகமான் மன்னன் குணசீலன் என்பவன் காலத்தில் அமைக்கப்பட்டவையாம். அரங்கநாதர் குடைவரைக் கோயில் கல்வெட்டில் அதியேந்திர விஷ்ணு கிரகம் என்று குறிக்கப்பட்டுள்ளது. மாமல்லபுரத்தை அடுத்த சாலுவன் குப்பத்தில் உள்ள குடைவரைக் கோயில் அதிரான சந்த பல்லவேசுவர கிரகம் எனப்படுகிறது. மாமல்லபுரத்தில் உள்ள ஆதிவராகக் குடைவரைக் கோயிலில் பரமேசுவர மகா வராக விஷ்ணு கிரகம் என்று கூறப்பட்டுள்ளது. இவற்றை ஒட்டி நாமக்கல் குடைவரைக் கோயில் அதியேந்திர விஷ்ணு கிரகம் என்று பெயர் இடப்பட்டது.

அசுரன் ஒருவனால் கவரப்பட்ட உலகைத் திருமால் வராக வடிவம் கொண்டு மீட்டுக் கொடுத்ததைப் போன்று அரசர்களாகிய தாங்கள் உலகை இடுக்கண் பலவற்றினின்றும் காப்பதையும் திருமால் திரிவிக்ரம வடிவில் தனது பேராற்றலால் உலகம் யாவையும் அளந்ததைப் போன்று அரசர்களாகிய தாங்கள் தங்களது ஆற்றலால் உலகை ஆளுவதையும் வராகம் மற்றும் திரிவிக்ரம வடிவங்கள் சுட்டிக் காட்டுவதாகக் கருதப்பட்டன. எனவே, திருமாலின் பத்து அவதாரங்களில் வராகம் மற்றும் திரிவிக்ரம வடிவங்களை அக்கால மன்னர்கள் அதிக அளவில் சிற்பங்களாக அமைத்தனர் எனத் திரு கே. ஆர். சீனிவாசன் தமது "பல்லவர்களது குடைவரைக் கோயில்கள்" என்ற நூலில் குறிப்பிட்டுள்ளார்.

வராகம் மற்றும் திரிவிக்ரம வடிவங்கள் பல்லவர்களது குடைவரைக் கோயில்களில் உருவாக்கப்பட்டது போன்று அதிகமானின் நாமக்கல் குடைவரைக் கோயிலிலும் அமைக்கப்பட்டன. இந்த வடிவங்கள் பாண்டியர்கள் மற்றும் முத்தரையர்கள் குடைவரைக் கோயில்களில் அமைக்கப்படவில்லை. இவ்வாருக அதிகமான் குடைவரைக் கோயிலின் அமைப்பு, புதைசிற்பங்களை உருவாக்குதல், பெயர் வைததல் ஆகியவற்றில் பல்லவர்களைப் பின்பற்றியுள்ளான்.

எட்டாம் ஆம் நூற்ருண்டின் இறுதியில் அதிகமான்கள் பாண்டியர்களால் வெற்றி கொள்ளப்பட்டதாகத் தெரிகிறது. மேலும், குடைவரை கோயில்களில் இராசசிம்மன் பாணியில் புதை சிற்பங்களுக்கு அதிக முக்கியத்துவம் அளிக்கப்பட்டது. இதன் காலம் கி. பி. 674 முதல் 800 வரை என்று சொல்லப்படுகிறது. இவற்றைக் கருத்தில் கொண்டால் நாமக்கல் குடைவரைக் கோயில்களின் காலம் எட்டாம் நூற்ருண்டு எனக் கொள்ளலாம்.

———

## நற்றமிழ்ப் பயிர்

[வேலூர் ம. நாராயணன், எம். ஏ.,]

உலகுடன் தோன்றிய உயர்தனி மொழியே:
ஊனில் கலந்து உணர்வினை வளர்க்கும்
தலைமைத் தமிழே; ஒளியுமிழ் விழியே!

இலத்தீன்: கிரேக்கம்: ஈப்ரு: வடமொழி
இன்னோ ரன்ன பன்மொழி யாவும்
உனக்குப் பின்னர் உயிர்த்தன; மறைந்தன!
என்னும் பெருமையே இங்குற் றனவாம்!

கன்னித் தமிழே; 'கன்னிமை' காத்து
எண்ணாத் தொலையா இலக்கியந் தந்து
நாளும் தழைக்கும் நற்றமிழ்ப் பயிரே:
உன்னைப் பணிந்தேன்: உலகில்
உன்னலங் காக்க ஓயா துழைப்பனே!

# அமெரிக்காவில் மீனாட்சி திருக்கோயில்

அமெரிக்க நாட்டின் பல்வேறு மாநிலங்களில் குடியேறியுள்ள தமிழர்கள் தங்கள் வழிபாட்டிற்காகத் திருக்கோயில்களை அமைத்து வருகின்றனர். அவர்களுக்குள்ள பல்வேறு பணிகளுக்கிடையே இறை வழிபாட்டிற்காகக் காலத்தை ஒதுக்கினாலும் அதற்கென்று கோயில்கள் இல்லாமலிருந்தது பெருங் குறையாக இருந்தது. இதனைப் போக்க முதலில் நியூ யார்க்கில் பிள்ளையார் கோயிலையும் பின்னர் பிட்ஸ்பர்க்கில் திருவேங்கடத்தான் கோயிலையும் அமைத்தனர். தற்போது டெக்சாஸ் மாநிலத்திலுள்ள ஊஸ்டன் என்னும் நகரில் மீனாட்சியம்மை திருக்கோயிலை அமைத்துச் சூன் 27ஆம் நாள் குடமுழுக்கையும் சிறப்பாக நடத்தியுள்ளனர். ரூ. 1·25 கோடி செலவில் அமைக்கப் பெற்றுள்ள இத் திருக்கோயில் முழுக்க முழுக்கத் தமிழ்நாட்டுச் சிறப்புக் கலையை யொட்டிக் கட்டப்பெற்றதாகும். சென்னை மாமல்லபுரத்திலுள்ள திரு கணபதி தபதியின் திட்டப்படி இக் கோயில் கட்டப்பெற்றுள்ளது. இவரிடம் பயின்ற பன்னிருவர் அமெரிக்காவிற்குச் சென்று கோயிலை உருவாக்கியுள்ளனர்.

திரு. சி. வி. நரசிம்மன், டாக்டர் அழகப்பன், பேராசிரியர் ஆர். தியாகராசன், திரு. அரவிந்த கோஷ், திரு. எஸ். கண்ணப்பன் போன்றோர் முன்னின்று இப் பெரும் பணியை முடித்துள்ளனர்.

இத் திருக்கோயிலில் மூன்று கருவறைகள் உள்ளன. நடுவிலுள்ள கருவறையில் அன்னை மீனாட்சியும் இரு பக்கங்களில் சுந்தரேசுவரர் பெருமானும் வேங்கடேசப் பெருமாளும் கோயில் கொண்டுள்ளனர். இக் கருவறைகளைக் கொண்ட மகாமண்டபம் மட்டும் இப்போது கட்டி முடிக்கப்பெற்றுள்ளது. இதையொட்டித் திருச் சுற்றுகளும் 500 பேர் அமர்ந்து வழிபட மண்டபமும் கட்டி முடிக்கப்பெற்றுள்ளன. ரூ. 20 இலக்கம் செலவில் இராச கோபுரங்களும் வெளிச்சுற்றுகளும் இனி அமைய விருக்கின்றன.

இவற்றுக்கான நிதி நன்கொடை மூலமும் வங்கியிலிருந்து பெறும் கடன் வழியாகவும் திரட்டப் பெறுகிறது. மதுரை மீனாட்சி திருக்கோயிலைச் சார்ந்த அறங்காவலர் குழுவும் இக் கோயில் அமையத் தன்னாலான உதவியைச் செய்துள்ளது. குறிப்பாக அதன் தலைவர் திரு. வி. என். சிதம்பரம் அவர்கள் பல வழிகளில் உதவி புரிந்துள்ளார்.

இக் கோயிலின் குட முழுக்கைச் செய்வதற்குத் தமிழகத்திலிருந்து சென்னை காளிகாம்பாள் கோயில் திரு. சாம்பசிவாச்சாரியார் அவர்களும் மதுரை மீனாட்சியம்மை கோயில் திரு. தங்கம் பட்டரும் சென்றுள்ளனர். திரு தங்கம் பட்டர் அமெரிக்கா செல்லும் வழியில் பம்பாய்க்கருகில் விமான விபத்தில் உயிர் தப்பியது அன்னை மீனாட்சியின் அருளாகும். அருட்செயலுடனேயே அமெரிக்க நாட்டில் குடியேறியுள்ள அன்னை மீனாட்சி அமெரிக்கத் தமிழர்கட்கு அருள் பாலிப்பாளாக.

---

## கவிதைப் பொருள்

கவிதையின் பயன்கள் குறித்த எண்ணங்கள் பல. கவிஞன் தன் வாழ்வின் உணர்வு வடிகாலாகத் தன் கவிதைப் படைப்பைக் கருதினால் கவிஞனுக்கு மனநிறைவாம் பயன் நல்குவதே முதல்நிலை; பின்னே தொடர்பவை பிற நலன்கள். ஒரு கருத்துக்கான மரபே கவிஞனால் மாற்றியமைக்கப்படும். பாடுவோன் வழிநின்று எதனையும் பயின்று புரிந்துகொள்வதுதான் கவிதையுலக நெறி. ஓர் ஆங்கிலப் புலவர் (W. H. Davies) "மூன்று அழகுகள்" என்றொரு கவிதை பாடினார். "அறுவடைக்குக் காத்திருக்கும் ஒரு வளவயல்; மகப்பேறு பெறுமுன் பெண்ணொருத்திக்கு வாய்த்த தாய்மைக் கோலம்; விடுதலையடைந்து தாயகத்தின் கரையை நண்ணும் மக்களையேந்திய கப்பல்!" இவை மூன்றும் கவிஞர் டேவிசுக்கு அழகுகளாகத் தோற்றமளித்தன. இப்பாடலைப் பயிலும்வரை அழகு என்பதன் கருத்து ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு வகையாக இருக்கலாம். கவிஞனின் உள்ளத்தின் மூலம் ஒரு பட்டறிவை அறிவதே கவிதை பயில்வதன் தலையாய நோக்கம்.

ஓசை நயத்திற்காகவும் வடிவத்திற்காகவும் வரையறுத்த வரம்புகளைக் குறிக்கலாம். ஆனால் பாடலில் பாடுபொருளாக உயிர்க்கும் செய்தியையும் கருத்தையும் வரையறுக்க இயலாது. கவிஞன் எப்பொருளையும் தேர்ந்து பாடலாம்; பாட்டின் பொருள் யாதாயினும் பாடுவோன் உள்ளத்தை முன்னிட்டதே கவிதை. கவிஞன் உள்ளத்தில் (தான்) கவிதை படிந்துள்ளது. பாடுதற்குத் தேர்ந்த பொருளில் கவிதைக்குரிய தூண்டுதல் இருக்கலாம். "உள்ளத்தில் இருப்பதே கவிதை. 'பொருளில்' அன்று' என உணர்த்தவே கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை

"உள்ளத்துள்ளது கவிதை—இன்பம்
உருவெடுப்பது கவிதை"

என்றிசைத்தார். "என்ன?" என்பதைவிட "எப்படி?" என்பதே கவிதையை நிறுவுகிறது எனக் கருதும் திறனாய்வாளர் நோக்கே கவிமணியின் கருத்தில் மிளிர்கிறது.

—மின்னூர் சீனிவாசன்.

## "குழந்தைகள் இல்லா வீடு"

[பாவலர் நிறைவாணன், க. மு.]

இன்தமிழ் நாட்டி லெங்கும்
 இலக்கியக் கழகந் தோன்றி
நன்முறை இயங்கல் வேண்டும்;
 நற்றமிழ் காத்தல் வேண்டும்;
ஒன்றிய உள்ளங் கொண்டு
 ஒற்றுமைப் போர்வா ளேந்திக்
குன்றென நிமிர்ந்து நின்று
 குறள்நெறி பரப்பல் வேண்டும்!

அறிவினை வளர்ப்ப தற்கும்
 அறந்தனைப் போற்று தற்கும்
அறிஞர்கள் அந்த நாளில்
 அருந்தமிழ்ப் பனுவல் தந்தார்;
எரிந்திடும் நெருப்பே போலும்
 இழிபா லுணர்வைத் தூண்டி
நரம்பினில் தளர்ச்சி கூட்டும்
 நூல்களை இந் நாள் தருவார்!

நானிலம் போற்று கின்ற
 நற்றமிழ் வாணர் தம்மைத்
தானினங் கண்டு கொண்டு
 தக்கநல் மேடை தந்து
தேனினு மினிய அன்னார்
 சொற்பொழி வதனைக் கேட்போம்;
மானமும் மனத்தில் நிறைவும்
 மூளுதற் கஃதே வழியாம்!

இலக்கியக் கழக மின்றி
 இனமொழி யுணர்வு மின்றி
துலங்கிடும் தூய அன்பில்
 தோய்ந்திடும் நெஞ்ச மின்றி
விலங்கென வாழு வோர்கள்
 மலிந்திடும் எந்த நாடும்
கலகலப் புடனே; ஆடும்
 குழந்தைகள் இல்லா வீடே!

———

# *இந்து சமயம்

[டாக்டர் ஜே. ஜி. கண்ணப்பன், M. D. S. F. I. C. D]

**தெய்வமணம் கமழும் திருநாடு :**

நம் நாடு தெய்வமணம் கமழுகின்ற திருநாடு. தெய்வம் உண்டு என்ற கொள்கையும், தெய்வத்திற்கு உரிய ஐந்தொழிலான படைத்தல், காத்தல், அழித்சல், மறைத்தல், அருளல் என்ற கொள்கையும் நம் நாட்டுச் சமயங்களில் பொதிந்துள்ளன. சுருங்கக் கூறின் 'அவன் அன்றி ஓர் அணுவும் அசையாது' என்ற உண்மை நெறியைப் போற்றி விளங்குவது நம் நாடு.

**தெய்வம் :**

தெய்வம் என்னும் பொருளில் 'தேவு' என்னும் சொல்லை ஆழ்வார்களும் நாயன்மார்களும் பலப்பல இடங்களில் ஆண்டுள்ளனர்.

"தெவுக் கொளற் பொருட்டே"
(தொல்காப்பியம் சொல்லதிகாரம் சூத்திரம் 345)

என்ற நூற்பாவால் 'தெவு' என்பதற்குக் கொள்ளுதல் என்ற பொருள் புலப்படக் காணலாம். இந்த உண்மையைத் தெரிந்த தமிழர்கள் கடவுளை மாயோனாகவும், (திருமால்), சேயோனாகவும் (முருகன்) வேந்தனாகவும் (இந்திரன்), வருணனாகவும் வழிபட்டு வந்தனர்.

இதனை,

"மாயோன் மேய காடுறை உலகமும்
சேயோன் மேய மைவரை உலகமும்
வேந்தன் மேய தீம்புனல் உலகமும்
வருணன் மேய பெருமணல் உலகமும்
முல்லை குறிஞ்சி மருதம் நெய்தலெனச்
சொல்லிய முறையால் சொல்லவும் படுமே"
(தொல்காப்பியம்; அகத்திணையியல்: சூத்திரம்-5)

என்னும் நூற்பா தெளிவாக்குகிறது.

---

*கடந்த ஏப்பிரல் திங்களில் இலங்கையில் நடைபெற்ற உலக இந்து சமய மாநாட்டில், 23-4-82இல் சென்னைப் பல் மருத்துவப் பேராசிரியர், ஜே. ஜி. கண்ணப்பன் அவர்கள் படித்த பேருரையின் சுருக்கம்.

இவ்வாறு தெய்வத்தைத் தமிழ்நாட்டார் பலவாறு போற்றினர்கள். பல திருப்பெயர்களால் வணங்கினர்கள். நாளடைவில் கடவுளர் பெயர்கள் ஆயிரக்கணக்காகப் பெருகின. மாணிக்கவாசகர் இதனை,

"ஒருநாமம் ஓர்உருவம் ஒன்றுமில்லாற்கு ஆயிரம்
திருநாமம் பாடிநாம் தெள்ளேணம் கொட்டாமோ"
(திருவாசகம்-திருத்தெள்ளேணம்)

என்று தம் திருவாசகத்தில் கூறுகின்றார்.

இறைவனை அன்பு, சிவம், மங்கலம், அறம் என்ற பல பொருள்கள் கொண்ட செம்பொருளாக முன்னோர் போற்றினர்.

திருமூலர் அன்பு என்ற பொருளில்,

"அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவது யாரும் அறிகிலார்
அன்பே சிவமாவது யாரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்திருந் தாரே" (திருமந்திரம்)

என்று கூறுகின்றார். இதனால் அன்பு நெறியே சிவநெறி என்பது தெளிவு.

உலகத் தோற்றம் ;

உயிரைப் பற்றி நிற்கும் அழுக்கினைப் போக்கி, உயிரை ஆட்கொள்ளவே கடவுள் உலகத்தைப் படைத்தார்.

நாம் வாழும் இவ்வுலகுபோல் பல உலகங்களை (அண்டங்களைப்) படைத்து உயிர்களையும் வாழச் செய்துள்ளான் இறைவன். அண்டங்கள் பல விண்ணில் இயங்குவதை,

"அண்டப் பகுதியின் உண்டைப் பிறக்கம்
அளப்பரும் தன்மை வளப்பெருங் காட்சி
ஒன்றனுக்கு ஒன்று நின்றெழில் பகரின்
நூற்றொரு கோடியின் மேற்பட விரிந்தன"
(திருவாசகம் திருவண்டப்பகுதி)

என்று மாணிக்கவாசகர் குறிப்பிட்டுள்ளார்.

மனிதப் பிறவி :

"அரிது அரிது மானுடராதல் அரிது"

என்று ஔவையார் கூறியுள்ளார்.

மன்-நினைப்பவன்; மனம் உள்ளவன் - மனிதன் : மனிதன் சிந்திக்கும் தன்மையுடையவன். நன்று எது; தீது எது என ஆராய்ந்து தெளிபவன். மனிதன் விலங்கினின்றும் வேறுபட்டு நிற்கச் சான்றாக அமைவது பகுத்தறிவு எனப்படும் ஆறாவது அறிவே. அறிவெனப்படுவது நன்றின்பால் உய்ப்பதே. கல்வி அறிவின் பயன் இறையுணர்வு கொள்வதே என்ற கருத்தில்,

"கற்றதனால் ஆயபயன் என்கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅர் எனின்"　　(குறள்-2)

என்று வான்புகழ் வள்ளுவரும் கூறியமை நினைக்கத் தக்கது. கடவுள் மனிதப் பிறவியைப் படைத்தற்கான காரணமாக,

"மானுடப் பிறவிதானும் வகுத்தது மனவாக்கு காயம்
ஆனிடத் தைந்தும் ஆடும் அரன் பணிக்காக அன்றோ"
(சிவஞான சித்தியார்)

என்று சிவஞான சித்தியாரும் கூறியுள்ளதை உணர்ந்து போற்றுவோம்.

மதம் - இந்துமதம் :

சிற்றின்பம் உலக இன்பம் அழியத்தக்க இன்பம், பேரின்பம் அழியாத இன்பம். இப்பேரின்பத்தை மக்கள் நுகரப் பெரியோர்கள் இறைவன் அருளுடன் வகுத்த வழியே மதமாகும். மதம் சமயம் என்பன ஒரு பொருளே தருவன.

'இந்து மதம்' என்ற சொற்றொடர் பற்றிச் சில கருத்துக்கள் நிலவுகின்றன.

ஆரியர்கள் சிந்துநதிப் பகுதியில் வாழ்ந்தபோது அவர்களைப் பாரசீகர் சிந்துக்கள் என்றும், கிரேக்கர்கள் இந்துகள் என்றும் அவர்கள் வாழ்ந்த நாட்டை இந்தியா என்றும் கூறினர். இக் கருத்து நேரியதன்று என்று கூறுகின்றனர்.

இந்து மதத்தின் பெருமைகள் :

இந்துமதம், மற்ற மதங்களுக்கெல்லாம் காலத்தால் முந்தியது. பிற மதங்கள் கூறும் சிறந்த கொள்கைகள் இதில் உள. இது எந்த மதத்தையும் இழிவு படுத்தாமல் அணைத்துச் செல்கிறது. வெறும் நம்பிக்கையுடன் நில்லாமல் மனதில எழும் ஐயங்களை நீக்கி மெய்யறிவினைப் புகட்டுகிறது. தனிஉரிமையுடன் வாழச்செய்கிறது. இல்லறத்தாலும் துறவறத்தாலும் முத்தி

பெற்வழிகாட்டுகிறது. உலகியலுடன் இணைந்து செல்லும் நெறிகளைக் கொண்டு விளங்குகிறது. இவ்வுலகில் பிறந்த அனைவரும் வேறுபாடின்றி சமயநெறிகளைக் கையாண்டு முத்தி பெற வாய்ப்புகள் உள்ளன. மறு பிறவியில் நம்பிக்கை உண்டு எனக் கூறுகிறது. விஞ்ஞானத்தாலும் அறிய இயலாத கருத்தை மெய்ஞ்ஞானத்தால் விளக்கி உரைக்கிறது. விவேகானந்தர் போன்றோரிடம் பிறநாட்டினரும் சமயத்துறையில் சீடர்கள் ஆனார்கள். அறிவியல் துறையில் முன்னேறியுள்ள நாட்டினர் பலர் நம் நாட்டில் இன்றும் வந்து மெய்யுணர்வுக் கொள்கைகளைக் கற்கின்றார்கள்.

சைவம்:

சிவனை ஆன்மாக்கள் அடையத் தூய்மை, அறிவு, அருள் ஆகிய உறுப்புகளைக் கொண்டு பேரின்பத்தைத் தருவது சைவம் எனப்படும். இதில் பதி, பசு, பாசம் பற்றிப் பேசப்படுகின்றன.

டாக்டர் G. U. போப் சைவசமயத்தைத் தமிழரின் பழைய மதம் என்று கூறியுள்ளார். சிவவழிபாடு பண்டைத் தமிழருடையது என்று 'ரகோசின்' என்ற மேலைநாட்டுச் சமய அறிஞர் கூறியுள்ளார். இமயம் முதல் குமரிவரை சிவலிங்க வழிபாடு இருந்து வந்திருக்கிறது. சிவபெருமானை முதன் முதலில் ஒரு மர நிழலில் பீடமும் கற்பிழம்பும் அமைத்துத் தமிழர் வழிபட்டனர். அதுதான் சிவலிங்கம் என்று தந்திர நூல் (ஆகமம்) கூறுகின்றது. ஆதியில் மக்கள் கூடுமிடம் மரத்தடிப்பக்கமாக இருந்தது. அதனை மன்றம், அம்பலம் என்பர். அம்பலம் என்ற சொல்லும் மன்றும், மலையாளத்தில் கோயில் என்ற பொருளில் வழங்கப்பட்டு வருகிறது. சிதம்பரத்தில் தில்லைமரமும் நெல்லையில் மூங்கிலும், குற்றாலத்தில் குறும்பலாவும் தலமரங்களாக உள்ளன.

சைவத்தின் பரந்த நோக்கம்:

ஒவ்வொரு சமயத்திலும் அருள்புரியும் பரம்பொருள் ஒன்றே என்பது சைவ சமயத்தின் கொள்கை.

*"அறிவினால் மிக்க அறுவகைச் சமயம்*
*அவ்வவர்க்கு ஆங்கே ஆரருள் புரிந்து"*

என்று தேவாரம் இவ்வுண்மையை நன்கு உணர்த்துகின்றது. அறிவு குறைந்தோர் புதிய சமயங்களை வகுத்து எங்கு பரப்பினும்

குற்றம் இல்லை. அது எம் தலைவனாகிய சிவபிரானுக்கு ஏற்புடையதே என்பதனை,

> "விரிவிலா அறிவினார்கள் வேறொரு சமயம் செய்தே
> எரிவினாற் சொன்னா ரேனும் எம்பிராற்கு ஏற்றதாகும்"

என்று அப்பர் பாடிய அருள் திறம் எண்ணி எண்ணி இன்புறத் தக்கதாகும். எனவே இவ்வுலகில் சைவமே மெய்ச்சமயம்; மற்றைய பொய்ச் சமயம் என்று அது புகலவில்லை என்று தெள்ளிதின் உரைக்கின்றது என்று தெரிகிறது.

ஆண்டவன்முன் அனைவரும் சமம் என்ற பரந்த கொள்கை உடையது சைவம். ஆனால் பிற்றைநாளில் சைவ சமயக் கொள்கை உணராத பிறர் ஆலயங்களில் பூசை செய்ததனாலும் நடைமுறை நிகழ்ச்சிகளைப் பார்த்ததாலும் கோயில்களிலும் சாதிப்பாகுபாடு ஏற்பட்டது. கோயிலுக்குள் சில சாதியார் செல்லல் கூடாதென்றும், அங்ஙனம் சென்றாலும் இன்னார் இன்ன இடத்தில்தான் நிற்கவேண்டும் என்ற நிலையும் ஏற்பட்டது. சைவ சித்தாந்தத்தில் சமயத்துக்கும் சாதிக்கும் சம்பந்தமில்லை என்பதனை,

> "சாத்தி ரம்பல பேசும் சழக்கர்காள்
> கோத்திரமும் குலமுங் கொண்டு என்செய்வீர்"

என்றும்,

> "ஆவுரித்துத் தின்றுழலும் புலைய ரேனும்
> அவர்கண்டீர் நாம் வணங்கும் கடவு ளாரே"

என்றும் கூறுகிறார் அப்பரடிகள்.

**கோயில் (ஆலயம்):**

அண்டங்களுக்கெல்லாம் அப்பாற்பட்டு எங்கும் நீக்கமற நிற்கின்ற சர்வ வல்லமையுள்ள கடவுளை நாம் எங்கே காண்பது? இப்பூவுலகத்திற்கு மட்டுமல்லாமல் எல்லா அண்டங்களுக்கும், சூரியன் சந்திரன் முதலிய கோளங்களுக்கும் எல்லா அரசர்களுக்கும் தேவர்களுக்கும் அதிபதியாகிய ஆண்டவனை இலகுவில் கண்டு வணங்க ஆலயங்களைக் கட்டுவித்து அதில் அவரை எழுந்தருளச் செய்திருக்கிறார்கள் அறிஞர்கள். ஆ—ஆன்மாக்கள்; லயம்-ஈடுபட்டு நிற்கும் இடம் என்று சமய அறிஞர்கள் ஆலயம் என்ற சொற்கு விளக்கம் தந்துள்ளனர். கோ - இறைவன்; இல் இருக்குமிடம் என்று கோயில் என்ற சொல்லுக்குப் பொருள் கூறுகின்றனர்.

ஆன்மாக்களின் மனது பிற இடங்களைப் பார்க்கிலும் சிறப்பாக ஆலயங்களில் ஈடுபடக்கூடிய முறையில், முறையாகப் பலவித அமைப்புகளுடன் கட்டப்பட்டுள்ளன. மனம் ஒன்று படுவது மட்டுமன்றி மக்கள் பலரும் ஒன்றுகூடும் இடம் ஆலயமாக அன்றும் இன்றும் இருந்து வருவதை நாம் அறிவோம். ஆலயங்களைப் போல விசாலமான இடங்களும், வசதிகளும்; தூய்மையும் பிறஇடங்களில் கிடையா. இங்ஙனம் தூய்மை நிறைந்து மன ஒருமைப்பாட்டுக்கு உறுதுணையாகவும் அமைதி நிறைந்த சூழலை உடைய ஆலயத்தில் எல்லாம் வல்ல இறைவனை மனம் ஒன்றி வழிபட நமக்குத் தகுதியறிந்து வேண்டுவன நல்குகின்ருன் என்பது உண்மை.

**சமயங்கள் சீர்கேடக் காரணம் :**

சமயத்தில் உறுதிப்பாடு இல்லாதவர்களாலும், புதுமை என்ற பெயரால் ஒவ்வாத கொள்கையுடையோராலும், மொழி, சாதி உயர்வு தாழ்வு கருதியோராலும் உட்கிளைகள் பிறந்தன.

நாளடைவில் இந்துமதமக்கள் சமய ஞானம் இன்றிப் படித்துப் பட்டம் பெற்றனர். அதனுல் சமயம் போற்றுவார் அற்றநிலையில் மங்கிய நிலையில் காணப்பட்டது. மதப் பற்றுளர் களும் சமயத்தின் பெயரால் போரிட்டுக் கொண்டனர். சமய அறிவு சிறிதும் இல்லாதார் தூற்றினர். இன்ன பிற காரணங் களால் கல்லா மாந்தர் பிற சமயம் புகத் தொடங்கினர்.



## எண்ணிப் பார்த்தல் வேண்டும் - எப்போது ?

*நிலையாமையை எண்ணிப் பாரா திருத்தலும் ஆகாது, எந் நேரமும் எண்ணிப் [பார்த்ிருத்தலும் ஆகாது. அற்றேல், அதனை எண்ணிப் பார்க்க வெண்டுவதெப்போதெனின், அறிவுங் கல்வியும் செல்வமும் வாய்த்தவர்கள் தாம் பெற்ற இவ்வரிய பேறுகளைப் பயன்படுத்துதலிற் சிறிதுங் காலந் தாமுமைப் பொருட்டு, வாழ்க்கை நிலையாமையினை இடை யிடையே தமது நினைவுக்குக் கொணர்தல் வேண்டும்.*

மறைமலையடிகள்.

(இளைஞர்க்கான இன்றமிழ், பக். ௪௫)

# நறுமா

[புலவர். பொன். முனியப்பன், கூகலூர்]

'பொன்படு கொண்கானம்' என்னும் 'தோகைக் காவின் துளு நாட்டை ஆண்ட மன்னன் நன்னன் என்பவன். இவனைப் 'பெண் கொலைபுரிந்த நன்னன்' எனப் பேசுவர். இவன் பெண் கொலைபுரியக் காரணமாய் இருந்தது ஒரு மாங்காய். அஃது கனியாவதற்கு முன்பே நன்னனுக்கு என்றும் அழியாப் பழியை உண்டாக்கிவிட்டுச் சென்றொழிந்தது.

ஓர் எளிய மாங்காயின் பொருட்டு "பெருங்கல வெறுக்கை சூழாது சுரக்கும் நன்னன்" (அகம். 349) பெண் கொலை புரிந்தான் எனக் கூறுவது பொருத்தமாகத் தோன்றவில்லை. அவ்வாறாயின் ஒரு மாங்காய்க்காகப் பெண் கொலை புரியவில்லை எனக் கூறலாமா? எனின், அவ்வாறு கூறவும் சங்க இலக்கியங்களில் இடமில்லை.

எனவே, நன்னன் பெண்கொலை புரிந்தது ஒரு மாங்காய்க் காகவே. ஆயின், அம்மாங்காய் எல்லா இடங்களிலும் விளைகின்ற பொதுவான - இயல்பான - எளிய ஒரு மாங்காய் அன்று. பிற எல்லா மாங்கனிகளையும்விட ஆற்றல் - அஃதாவது உயிராற்றல் தரும் சீர்மையுடையது.

'எண்பத்தொரு யானைகளோடு அவள் நிறை பொன்செய் பாவை' கொடுப்பதாகக் கூறியும் (குறுந் 292) 'பொன்படு கொண் கான நன்னன்' (நற். 391) அதனைப் போற்றிப் பெற்றுக் கொள்ளாமல் பெண் கொலை புரிந்தான் என்றால், அந்த மாவின் மீது அவன் கொண்டிருந்த பற்று எத்துணை என்பதை ஒருவாறு உணரலாம்.

அவ்வண்ணம் மிகுந்த பற்றும், வேட்கையும் கொள்ளும் அளவிற்கு ஒரு மாங்காயில் என்ன இருக்கிறது? என்னும் ஐயம் எல்லோர்க்கும் எழுதல் இயல்பே. சித்தர் பாடல்களை அறியும்போது இவ்வையம் நீங்கும் வழி அமைகிறது.

அதியமான் தனக்கு அரிதிற் கிடைத்த கரு நெல்லிக் கனியை ஔவைக்கு ஈந்து அரும் புகழ் பெற்ற இனிய வரலாறு எல்லோரும் அறிந்ததே. இக் கரு நெல்லிக்கனி இயற்கையில் கிட்டாது - விளையாது. சித்தர்கள் செயற்கை முறையில் உருவாக்குவது. மிகு நஞ்சுத்தன்மையுடைய சேங் கொட்டையை

நிலத்தடியில் குறிப்பிட்ட அளவு குழியில் நிறைத்து அதன்மேல் மண்ணிட்டு, அந் நஞ்சுக் கொட்டைகள் பக்குவம் அடையும் நிலையறிந்து. அதன் மேலிட்ட மண்ணில் இயற்கையான நெல்லி விதையை ஊன்றி, வளர்த்தால் அந் நெல்லிமரம் தரும் முதற் கனியே உயிராற்றல் மிகுவிக்கும் கரு நெல்லிக்கனியாகும்.

இக் கனியின் உருவாக்கமும் பிறவும் 'கரு நெல்லிக்கனி' என்னும் தலைப்பில் யான் வரைந்த கட்டுரை முன்பே செந்தமிழ்ச் செல்வியில் வந்துள்ளது. அத்தகுமுறையில் பெருங்குழி யமைத்து, சேங்கொட்டைகளை நிறைத்து, அதன் பக்குவம் அறிந்து. சிறந்த மாங்கொட்டை ஒன்றை ஊன்றி, அது வளர்ந்து மரமாகி, அதில் 'கொம்மையம் பசுங்காய் குடுமி விளையக்' கண்டவன் 'பாரத்துத் தலைவன் ஆர நன்னன்' (அகம். 152)

ஆயின், அந்தோ! 'திரண்ட பசுங்காய் அம் மாமரத்தின் உச்சியில் விளைந்த போதும்' (அகம்: 15) அது கனியாகிக் கையில் கிடைக்குமுன் உதிர்ந்தது - இல்லை! உதிர்க்கப்பட்டது. அதன் அருநிலை உணராது ஆற்றுநீரினின்றும் அதனை எடுத்து ஒரு பெண் உண்டாள். 'பேரிசை நன்னன்' (மதுரைக். 618) நெறிபிறழ்ந்து அவள் உயிர் உண்டான். அழியாப்பழி பூண்டான்.

இத்தகு கூற்றிற்கு ஏற்ற சான்றுகள் யாவை? என்னும் வினாக்களுக்கு உரிய விடைகளை நோக்குவோம். 'கரணமமைந்த காசறு செய்யுட் பரணர்'' என்னும் திறன் மிகு புலவர் வாய்மை சான்ற வரலாற்றுச் செய்திகளை வழங்குவதில் வல்லவர்.

அவர், குறுந்தொகையின் 73ஆம் பாடலில் 'நன்னன்' நறுமா கொன்று நாட்டிற் போக்கிய' எனக் கூறுகிறார். இதில் 'நறுமா' எனக் கூறிய கூற்று நன்கு எண்ணிப் பார்க்கத் தக்கது. ஒரு பெண்ணின் உயிரைப் பறிப்பதற்குக் காரணமாயிருந்த 'மா'வை 'நறுமா' என்கிறார். சங்கப் புலவர்கள் வறிதே அடைச் சொற்கள் புணர்ப்பது இல்லை என்பதை ஆய்வு நோக்கோடு சங்க இலக்கியங்களை ஊன்றிப்படிப்போர் தெளிவாய் உணர்வர்.

ஆகவே, 'நறு' என்னும் அடைசொல் வெறு நெல்லி அல்லாத கரு நெல்லி போன்ற உயிராற்றல் மிகுவிக்கும் உயர் வுடையது என்பதைக் காட்டுவதற்கே அங்கு பெய்யப்பட்டது - புணர்க்கப்பட்டது. நன்னன், பெண் கொலை புரிந்து பழி ஏற்ற பின் இக் கூற்று கூறப்படுகிறது என்பதை அக் குறுந்தொகைப்

பாடலைப் படிப்போர் அறியலாம். அவ்வாறு நெறிதவறிய, கொடுஞ்செயல் ஒன்று செய்யக் காரணமாயிருந்த 'மா'வை 'அழிமா' என்றோ, 'இழிமா' என்றோ, 'பழிமா' என்றோ சுட்டாமல் 'நறுமா' எனச் சுட்டிய தன்மையை எண்ணிப்பார்ப்போர் மேற் கூறிய உண்மையில் பொதிந்துள்ள திண்மையை உணர்ந்து கொள்ளலாம்.

மேலும், நறுமா என்னும் சொல்லை அடுத்துள்ள 'கொன்று' என்னும் சொல்லும் அம்மரத்தின் ஆற்றல் மிகு உயிர்த்தன்மையை உணர்த்தும் வன்மையுடையது. மரஞ்செடி கொடிகள் முதலான நிலைத்திணைகள் யாவும் உயிருடையவை என்பது தொல்காப்பியருக்கு முன்பிருந்தே சங்ககாலப் புலவர்கள் எல்லோரும் தெளிவாய் அறிந்ததே. ஆயினும் ஒருமரம் வீழ்த்தப் படும்போது தடிந்த என்றும், வெட்டிய என்றும், சாய்த்த என்றும், முறித்த என்றும், வீழ்த்திய என்றும் கூறுவதே வழக்கு.

இங்கு, 'கொன்று' என்ற சொல்லைப் பரணர் அமைத்த பாங்கை உற்றுணரும்போது, ஒரு பெண்ணைக் கொலை செய்வதற்கு நிகராக இல்லாவிட்டாலும், எளிய அல்லது இயல் பான ஒரு மரத்தை வீழ்த்துவது போன்றது அன்று என்பதையே காட்டுகிறது. கொலை என்பதற்கும், கொன்று என்பத்ற்கும் கொல் என்பதே அடிச்சொல்.

இவ்வரலாற்றோடு, இச் சொல்லின் இயல்பினையும் எண்ணி ஆய்வோருக்கு 'இன் களி நறவின் இயலதேர் நன்னன்' (அகம் 173) வளர்த்தமா போற்றற்கில்லாது தூற்றுதற்குரிய வெறு மா அன்று என்பதும், ஆற்றலும் ஏற்றமும தரும் நறுமா என்பதும் புலப்படும்.

இத்தகு ஏற்றமிகு மரத்தினின்றும் ஒரு காய் போனதற்காக அத்தகு கொடுஞ்செயல் செய்வது எப்படிப் பொருந்தும்? அக் காய் போனாலென்ன, அடுதத காய் அல்லது கனி உண்டு ஆற்றல் பெறலாமே? எனும் வினா எழுகின்றது. இவ் வினாக்கள் எழுப்பும் தடைக்குச் சித்த மருத்துவ உலகில் வழங்கும் ஒரு பழமொழி தக்கவிடை தருகிறது.

அஃதாவது, "முதற் கரு போயின் முழுப்பயன் இல்லை" என்பதே அப்பழமொழி. பல்வேறு இயற்கை செயற்கை மருந்துப் பொருள்களுக்கும் பொதுவாக வழங்குவது இது. மிகுந்த நஞ்சுத்தன்மையுடைய சேங்கொட்டையினின்றும் தோன்றிய நறுமா கொடுக்கும் முதற்கருவான முதற்கனியே முழுப்பயன்

உடையது. அப்பயன், நன்னனை விரும்பாதோரால் - நன்னன் உயிராற்றல் பெறும் நன்மையைப் பொறுக்கமுடியாதோரால் உதிர்க்கப்பட்டது எனக் கூறுவதே பொருந்தும்.

ஏனெனில், மேற்குறித்த செயற்கை முறையில் உருவாகும் திறனுடைய காய் வன்மையும் திண்மையும் உடையது. எளிதில் உதிரும் இயல்புடையதன்று. எனவே, அது உதிர்க்கப்பட்டிருக்க வேண்டும். நன்னன் நலம் பெறுவதில் நாட்டமில்லாதாரால் உதிர்க்கப்பட்ட காய் புனலில் விழுந்து மிதந்து செல்ல, எடுத்து உண்டாள் ஒரு பெண் அவள் கொலை செய்யப்பட்டாள் - இறந்தாள்.

கருநெல்லி, நறுமா போலும் செயற்கை உருவாக்கங்களில் அது கனியாகுமுன் உள்ள காய்ப்பருவம் இயல்பாகவே நச்சுத் தன்மை உடையதாக இருக்கலாம். நன்னன் அப்பெண்ணைக் கொலைசெய்ததுமட்டுமின்றி, அக் காயின் இயல்பும் அவள் உயிருக்கு எமனாகி இருக்கக்கூடும்.

சங்க இலக்கியங்களில் ''புனல்தரு பசுங்காய் தின்றதன் தப்பற்கு'' (குறுந். 292) என்றும்; ''கொம்மையம் பசுங்காய் குடுமி விளைந்த'' (அகம். 15) என்றும் வந்துள்ள இதுபற்றிய கூற்றுகள் மேற்கூறிய கருத்திற்குச் சான்றாகின்றன.

எனவே, ''உருள்பூங் கடம்பின் பெருவாயில் நன்னன்'' (பதிற்று. 4 ஆம் பத்து பதிகம்.) சித்தர்களின் அறிவுரைப்படி அருந்திறலும், மிகு உயிராற்றலும் தரும் 'நறுமா'வை வளர்த்துப் பேணிவர, அது காய் ஈன்ற காலையில், நன்னனின் நலம் காணப்பொறாத நயவஞ்சரால் உதிர்த்தெறியப்பட முழுப் பயன் தரும் முதற்கரு முழுமையடையுமுன்னே, புனலில் வீழ்ந்துபோக உதிர்த்தாரைக் கண்டு ஒறுக்கும் உரனில்லா நன்னன், எளிதில் பெறுதற்கரிய அரும் பொருளின் இழப்பால் தோன்றிய பேரவலத்தால், உண்டாளைக் கண்டு, கொன்று, உலகில் பெரும்பழி உற்றான்.

---

## மனிதன்

மனிதனின் பண்பு எதுவாயினும் ஆகுக; அவன் ஒரு தனிவகைப் படைப்பு என்பதில் ஐயமில்லை. அவன் கடவுளின் திருவுருவமல்லவானால், அவனை மண்ணுலகின் ஒரு நோய் என்றே கூறல் வேண்டும்.

ஜி. கே. செஸ்டர்டன்

# செய்திகளும் குறிப்புகளும்

## மாயூரம் 'மயிலாடுதுறை' ஆயிற்று

தஞ்சை மாவட்டத்திலுள்ள மாயூரம் என்னும் ஊர், முன்னர் மாயவரமாக இருந்தது மாயூரம் என மாற்றப்பெற்றது. இப்போது அவ்வூரின் பழைய பெயரும் தனித்தமிழ்ப் பெயருமான திருமயிலாடு துறை என்னும் அழகிய பெயர் வழங்கப்பெறுகிறது. இம் மாற்றம் கடந்த 28—6—82 முதல் செயல்முறைக்குக் கொண்டுவரப்பட்டது. வருவாய்த்துறைப் பிரிவு அலுவலகத்தில் புதிய பெயர்ப் பலகையினை தமிழக நிதியமைச்சர் மாண்புமிகு நாவலர் நெடுஞ்செழியன் திறந்து வைத்து நடுவணரசுக்கு நன்றி தெரிவித்தார். திரு மயிலாடு துறை எனும் அழகிய பெயர் மாயவரமாக இருந்தமை கண்டு ரா. பி. சேதுப்பிள்ளை அவர்கள் மிக வருந்தினர். இப்போது செய்யப்பட்டிருக்கும் இப் பெயர் மாற்றத்தால் அப் பெரியாரின் கனவு நனவாகியது எண்ணி மகிழத்தக்கது. தமிழக மக்களின் கோரிக்கைக்குச் செவிசாய்த்து, இப் பெயர் மாற்றத்தினைச் செய்த நடுவணரசுக்கு நமது நன்றியையும் பாராட்டுதலையும் தெரிவித்துக்கொள்ளுகிறோம்.

## பெருங் கவிஞர் பாரதி தொடர்சொற்பொழிவு

பெருங்கவிஞர் பாரதியார் நூற்றாண்டினையொட்டி, சிலம்புச் செல்வரவர்கள் நிகழ்த்திவரும் பாரதி தொடர் சொற்பொழிவின் 16 ஆவது கூட்டம் 25—6—82 அன்று மாலை, பாரதி வித்தியா பவன் அரங்கில் நடைபெற்றது. சிலம்புச் செல்வர் முனைவர் ம. பொ. சிவ ஞானம் அவர்கள் "பாரதி வளர்த்த உரைநடைத் தமிழ்" என்னும் பொருள்பற்றிப் பேசினர். திரு. எஸ். வேங்கடரத்தினம் அவர்கள் தலைமை ஏற்றார்கள்.

## திருஞானசம்பந்தர் இசைவிழா

திருக்கழுக்குன்றம் நால்வர்பேட்டை, நால்வர் கோயிலில் சூன் திங்கள் 11, 12, 13ஆம் நாள்களில் அழகரடிகளார் அருளிசைப் பந்த லில், திருஞானசம்பந்தர் இசைவிழாவும், நாலாயிரத் திவ்யப் பிரபந்த மாநாடும் நடைபெற்றன. இவ் விழாவில் இலங்கை அமைச்சர் செல்லையா ராசதுரை அவர்களும், தமிழக சட்டமன்றத் தலைவர் மாண்புமிகு ராசாராம் அவர்களும், மற்றும் நீதிபதிகள் சிலரும், பெருமக்கள் சமயச் சான்றோர்கள் ஆகியோரும் பங்கு கொண்டனர்.

## தென்கலை வளர்ச்சி மன்றக் கூட்டம்

11—6—82 அன்று மாலை, சென்னை மாவட்ட மைய தேவநேயப் பாவாணர் நூலக மாடிச் சொற்பொழிவு அறையில் அண்மையில்

இலங்கை சென்று வந்த திரு. மா. சு. சம்பந்தன், பெங்களூர் சென்று வந்த திரு. ஊ. செயராமன் ஆகியோர் தத்தம் பயண அநுபவம் குறித்து முறையே "உலக இந்து மாநாடும், இலங்கைத் தீவும்" "கன்னட நாடும் கன்னித் தமிழும்" என்னும் தலைப்புகளில் உரையாற்றினர். மன்றத் தலைவரும், முன்னாள் நகரத் தந்தையுமான திரு. கே. என். சீனிவாசன் அவர்கள் தலைமை தாங்கினர்.

## தமிழ்ப்பல்கலைக் கழகத்திற்கு ஓலைச்சுவடிகள் அன்பளிப்பு

திருவரங்கம் டாக்டர் ஆர். எஸ். இராஜன்பாபு அவர்கள் தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக் கழகத்திற்கு 34 ஓலைச் சுவடிகளை அன்பளிப்பாக வழங்கியுள்ளார். இச் சுவடிகளில் மருந்துகள், மருத்துவமுறை, குழந்தை மருத்துவம், பாம்புக்கடி மருத்துவம், ரசவாத மருத்துவமுறை, கணபதி மந்திரம், சோதிடம், மற்றும் பல குறிப்புகள் அடங்கியுள்ளன. இச் சுவடிகளிலுள்ள குறிப்புகள் ஆராயப்பட்டு வருகின்றன. இவற்றுள் ஒரு சுவடியில் இதுகாறும் வெளிவராத சிவகாமி ஆண்டார் அகவல் என்ற தோத்திரப் பாடலொன்று இருக்கிறது. இப் பாடல் 75 அடிகளைக் கொண்டது.

## பொறியியல், மருத்துவ நூல்கள் எழுதத் தமிழ்ப்பல்கலைக் கழகத்தின் பொருளுதவி

பொறியியல், மருத்துவவியல் நூல்களைத் தமிழில் எழுதுவதற்காகத் தமிழ்ப் பல்கலைக் கழகம் ரூ. 1, 40,000க்கு ஒரு திட்டத்தைத் தொடங்கியுள்ளது. பி. இ., எம். பி. பி. எஸ்., பாடத் திட்டங்களையொட்டி நூல் எழுத விரும்புவோர்க்கு இத் திட்டத்திலிருந்து பொருளுதவி செய்யப்படும். இதற்கு 67 பொறியாளர்களும் 53 மருத்துவர்களும் விண்ணப்பித்துள்ளனர்.

## மறைமலையடிகள் நூல்நிலைய வளர்ச்சிக்கு நன்கொடை

(செல்வி சிலம்பு-௫௬, ௪௪0ஆம் பக்கத் தொடர்ச்சி)

| | | |
|---|---|---|
| உயர்திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்கள் கழக ஆட்சியாளர் | ரூ | 10—00 |
| ,, ஆ. சுப்பையாபிள்ளை அவர்கள், கழக மேலாளர் | | 5—00 |
| ,, A. T. A. ஈசுவர் அவர்கள், சென்னை | | 5—00 |

# மதிப்புரை

## வளரும் சனநாயகத்தில் நீதிமன்றங்கள்

[ஆசிரியர்: சி. இராமகிருட்டிணன் பி.ஏ., பி.எல்., கரிகாலன் பதிப்பகம், குறள் இல்லம், 5/66, காரணீசுவரர் கோயில் வீதி, மயிலை, சென்னை-4, விலை ரூ. 15]

ஒரு மொழியின் வளர்ச்சிக்குக் காலந்தோறும் புத்தம் புதிய துறைகளில் எல்லாம் புதுப்புது நூல்கள் வெளிப்படுதல் வேண்டும். அதற்குத் துறைதோறும் அறிவார்ந்த பெருமக்கள் ஆர்வம் செலுத்திப் புத்தாக்கப் படைப்புகளைப் புரிதல் வேண்டும். இத்தகு சீரிய நோக்கில் வெளிப்பட்டுள்ள நூல்களுள் ஒன்று வளரும் சனநாயகத்தில் நீதிமன்றங்கள் என்னும் நூலாகும்.

மக்களாட்சி என்னும் எண்ணமும் அரும்பாத காலத்தில்—மூவேந்தராட்சி முழுதுற ஊன்றியிருந்த காலத்தில்—தோன்றிய திருக்குறளிலும் சங்க நூல்களிலும் செறிந்து கிடக்கும் குடியரசுக் கொள்கைகள் தாம் எத்துணை! எத்துணை! அவற்றை முறையாக ஆய்ந்து ஆசிரியர் நெறிப்பட வைக்கும்போது 'பழமைக்குப் பழமையாய்ப் புதுமைக்குப் புதுமையாய்' விளங்கும் பழந்தமிழ்ச் செல்வக் களஞ்சியத்தை நாம் கொண்டுள்ள பேற்றை நினைந்து பூரித்துப் போகின்றோம். அறிஞர் சி. இராமகிருட்டிணன் அவர்கள் பழந்தமிழ்க் கருத்துகளை மேலைநாட்டு அரசியல் சட்டப் பேரறிஞர்கள் கருத்துகளுடன் ஒப்பிட்டுக் காட்டும்போது நம்மையறியாமலே பெருமிதமும் 'இப் பெருஞ் செல்வம் நந்தம் வழிமுறைச் செல்வமாய் வாய்த்திருந்தும் அதன் சிறப்பினை உணராதிருந்தோமே' என்னும் ஏக்கமும் உண்டாதல் ஒருதலை.

அரசும் நீதிமுறையின் தேவையும், சட்டமும் சமுதாய அறமும், பழந்தமிழகத்தில் அறமன்றங்களும் நீதிமுறையும், குறள் காட்டும் நீதிமுறை—இன்னவாறுய பதினெண் தலைப்புகளில் இந்நூலை ஆசிரியர் யாத்துள்ளார்.

'தண்டனை குற்றவாளிகளைத் திருத்தப் பயன்படவேண்டுமே ஒழியப் பழிவாங்கும் தன்மைத்தாய் அமையக் கூடாது' என்னும் உயரிய கொள்கையைத் திருக்குறளைக் கொண்டு வலியுறுத்தும் ஆசிரியர் திறத்தைத் தமிழ்நாடு உயர்மன்றத் தலைமை நீதிபதி பாராட்டியுள்ளமை குறிப்பிடத்தக்கதாம். இதனைப் பழந்தமிழகத்தில் அறமன்றங்களும் நீதிமுறைகளும் என்னும் பகுதியில் விரிவாகக் காணலாம்.

'தேச வழமை' தமிழ்ப் பெருமக்களின் சட்டம் என்பதை ஆசிரியர் விளக்குவது அருமையாக உள்ளது. பாராளுமன்றமும் நீதிமன்றமும் என்னும் பகுதி ஆசிரியர் தம் துறையறிவுக்குச் சான்று. வினைவுக்குரிய வழக்குகள், நீதிமன்றங்கள் கண்ட பெருமக்கள், நீதிமன்றங்களில் நகைச்சுவை என்பன ஆசிரியர்தம் அகன்ற படிப்புக்குச் சான்றுகள்.

ஆசிரியர் ஈடுபட்டால் நகைச்சுவைப் பகுதியைத் தனி நூலாக வளர்க்கலாம் போலும்!

ஆசிரியர் ஆர்வமும் செயற்பாடும் பாராட்டத்தக்கன. அதே பொழுதில் நூலின் கைப்படியை மொழிவல்லார் ஒருவர் பார்வைக்குப் பின் அச்சிடலும், மெய்ப்புச் செவ்விதிற் பார்த்துப் பிழை களைதலும் நூலுக்குப் பொலிவூட்டும். ஆசிரியர்தம் தொண்டு வாழ்க.

—இரா. இளங்குமரன்

## பாரியும் கபிலரும் (இலக்கிய நாடகம்)

[ஆசிரியர்: எஸ். இராஜு செட்டியார், பி.ஏ., பி.எல்., கம்பன் பதிப்பகம், 16 தெளிசிங்கப் பெருமாள் வீதி, திருவல்லிக்கேணி, சென்னை-5. விலை ரூ. 15-00]

சில நாடகங்கள் நடித்தற்கு மட்டும் பயன்படும்; வேறு சில நாடகங்கள் படித்தற்கு மட்டும் பயன்படும்; மற்றுஞ் சில நாடகங்கள் நடித்தற்கும் படித்தற்கும் ஏற்றனவாயிருப்பினும் போற்றத்தக்கனவாய் இரா. இந்நாளைய புதுமை நாடகங்களுள் சில மக்கள் உள்ளத்தில் கீழ்த்தரமான எண்ணங்களை எழுப்பிடும் இயல்பினவாயுள்ளன.

இந்நிலையில் 'பாரியும் கபிலரும்' என்னும் இவ் இலக்கிய நாடகம், தமிழகத்தின் பொற்காலமாகிய சங்ககாலத்திற்கே நம்மை இட்டுச் செல்கிறது. புறநானூறு, நற்றிணை, குறுந்தொகை ஆகிய சங்க இலக்கியப் பாடல்களை அடிப்படையாக வைத்துப் புனையப்பட்டுள்ள இந்நாடகம் நல்ல தமிழில் வீறுநடை போடுகிறது. பாரி மகளிர் கதை பலரும் அறிந்ததேயாயினும் அதற்குப் புத்தொளி அளித்துப் படிப்போர்க்குப் புத்துணர்ச்சி ஊட்டுகிறார் இந்நூலாசிரியர். நாடக மாந்தர் வாயிலாகப் பல அரிய நீதிகளையும் உண்மைகளையும் புகட்டுவது இந்நாடகத்தின் தனிச் சிறப்பாகும்.

## பன்மொழிப் புலவர் மு. ச. சிவம் வாழ்க்கைக் குறிப்புகளும், தமிழுக்குச் செய்த ஆக்கப் பணிகளும்

[ஆசிரியர்: புலவர் இரா. வடிவேலன், க. மு., மீரா நிலையம், 35, பாப்பாத்திக் காடு முதல் தெரு, ஈரோடு-4. விலை ரூ. 6-00]

திரு. மு. ச. சிவம் அவர்கள் ஈரோடு வாசவிக் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராகப் பணியாற்றி வருபவர். பன்மொழிப் புலவர். எழுத்தாற்றல் பேச்சாற்றல் மிக்கவர். கடந்த இருபது ஆண்டுகளில் நாற்றைம்பதுக்கு மேற்பட்ட நூல்களை இயற்றியுள்ளார். பல்வேறு வகையான அகராதிகளைத் தொகுப்பது இவர்தம் முதன்மையான பணியாகும். இத்தகைய பேராசிரியரின் வரலாற்றினைப் புலவர் வடிவேலர் சிறந்த முறையில் எழுதியுள்ளார். முயற்சியுடையோரின் வரலாறுகள் பயன் மிக்கனவாகும். அவ்வகையில் இவ் வாழ்க்கைக் குறிப்பு நூலும் அனைவரும் படித்தற்குரியதாகும்.

தென்னிந்திய தமிழ்ச் சங்கத்திற்காக
60, பிரகாசம் சாலை, சென்னை, அப்பர் அச்சகத்தில்
திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிடப்பெற்றது.
ஆசிரியர்: இரா. முத்துக்குமாரசாமி, எம்.ஏ., பி.லிட்.

கழக நிலையங்களில் கிடைக்கும்

# பிற பதிப்பாளர்களின் புதிய வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| மன அமைதிக்குப் பக்தி முறைகள் —திருமருகல் சிங்காரவேலனுர் | 8 | 00 |
| அற்புதமான இந்துமதம் 1000 உண்மைகள் ,, | 12 | 00 |
| தொடு கோடுகள்—ரமணி சந்திரன் | 11 | 00 |
| சுருதி பேதங்கள் வாசந்தி | 10 | 00 |
| அந்திநேர உதயங்கள் ,, | 8 | 00 |
| இன்னொரு தேசீயகீதம்—கவிஞர் வைரமுத்து | 8 | 00 |
| எண்ணத்தின் வண்ணங்கள் (தில்லிப் பேராசிரியர்கள்) —சாலை இளந்திரையன் | 10 | 00 |
| காதலர் விடுகதைகள்—டாக்டர் ஆறு. இராமநாதன் | 9 | 50 |
| தெய்வத்தின் குரல்-மூன்றும் பகுதி—ரா. கணபதி | 40 | 00 |
| சொர்ணபுரி அம்பிகை பிள்ளைத்தமிழ் —டாக்டர் உ. வே. சாமிநாதையர் | 7 | 00 |
| குமாரலிங்கர் குறவஞ்சி ,, | 6 | 00 |
| சிரிக்கலாம் கவலையை மறக்கலாம்—பரிய பாலு | 6 | 00 |
| மௌனத்தின் மறுபக்கம்—இராம இராகவேந்திரன் | 7 | 75 |
| பைபிள் கதைகள் (புதிய ஏற்பாடு) —மதுரை இளங்கவின், பி.ஏ. | 6 | 00 |
| பைபிள் கதைகள் (பழைய ஏற்பாடு) எம். இருதயராஜ், பி.ஏ. | 6 | 50 |
| பாரதியின் பாதை பாலருக்குக் கீதை—அம்மன் சத்தியநாதன் | 6 | 25 |
| ஈழத்திலிருந்து ஓர் இலக்கியக் குரல்—டொமனிக் ஜீவா | 10 | 50 |
| புன்னகையும் பொன்னகையும் —எஸ். என். சி. நாகையன், எம்.ஏ. | 10 | 75 |
| தவம்—திருமுருக கிருபானந்தவாரியார் | 3 | 00 |
| மனோபலமே வாழ்வின் நலம்—மெர்வின் | 7 | 00 |
| புதுமைப்பித்தன்—முல்லை முத்தையா | 5 | 00 |
| தமிழ்ச் சுரங்கம் திரு. வி. க.—எஸ். ராஜலட்சுமி | 7 | 00 |
| நீதியின் தேரோட்டம்—நீதிபதி ச. மோகன் | 10 | 00 |
| குடி அரசு இதழில் பாரதிதாசன் பாடல்கள் —டாக்டர் ச. சு. இளங்கோ | 5 | 00 |
| அங்கயற்கண்ணி அணிமாலை - கவிஞர் கோகபென், பி.காம். | 5 | 00 |
| சிலம்பின் முதல் ஒலி—டாக்டர் வெ. சு. அழகப்பன் | 6 | 00 |
| கலைந்த கனவு வி. சா. பாலசுப்பிரமணியன் | 10 | 00 |
| நவதந்திரக் கதைகள்—மகாகவி பாரதியார் | 4 | 50 |
| மகாகவி பாரதியாரின் சந்திரிகையின் கதை —சீனி விசுவநாதன், டி. வி. எஸ். மணி | 6 | 00 |
| பாரதி வாழ்வும் வாக்கும்—சு. இராமசாமி | 4 | 80 |
| பாரதியாரின் சுவையான அனுபவங்கள் —தேவகோட்டை பி. நாராயணன் | 5 | 50 |

அப்பர் அச்சகம், சென்னை-1.